Registered No. M. 1500.

"NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
| --- | --- | --- |
| வருட சந்தா ... ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... ... | 3 | 0 |
| வெளிநாடு-வருட சந்தா ... | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

| விளம்பர விகிதம் | | |
| --- | --- | --- |
| பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ருபா | 7 | 0 |
| சில்லரை விளம்பரம் 1 அங். | 0 | 8 |

முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு க — விபவஞு ஐப்பசிமீ உஉஉ (7—11—28) புதன்கிழமை — பரல் ந

## சிலம்பொலி

### "தவநெறி"

திரு. வி. க.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

காரியமாய அமைப்புக்கட்கு, வடிவம் நிறம் முதலியன விருக்கும்போது, காரணமாய எண்ணங்கட்கும் அவை யிருத்தல் வேண்டுமன்றே? எண்ணங்கட்கும் வடிவம் உண்டு; நிறம் உண்டு. அவைகளைப் பருமைக் கண்ணால் காணல் இயலாது. சிலர் அந்நுண்மையைக் காணத் தமது கட்புலனைப் பண்படுத்திக் கொள்கிறார். அப்பயிற்சியின் அருமை நோக்கி மேல் நாட்டுத் தத்துவ ஞானிகள் கருவிகளால் நுண்மைகளின் வடிவம் நிறம் முதலியவற்றைக் காண்கிறார்கள். மனிதன் எண்ணும் எண்ணங்கட்கு வடிவம் நிறம் முதலியன உண்டு என்று நம்பெரியோர்கள் கண்ட உண்மை இப்பொழுது மேல்நாட்டு அறிஞரால் நிறுவிக் காட்டப்பட்டிருக்கிறது.

* * *

எண்ணத்துக் கேற்ற நுண்ணுடல் மனிதனுக்கு அமைகிறது. நுண்ணுடல் என்பது எது? மனிதன் எண்ணும் எண்ணத்துக்கு நிலைக்களனுகவுள்ள மனமேயாகும். மனிதனது பருவுடல் நீங்கியதும் அவன் மனமெனும் நுண்ணுடலுடன் மேலெழும்புகிறான். இந்நுண்ணுடலைக்கடந்து காரண சரீரம் என்றொன்று நிற்கிறது. அதைப் பற்றிய பேச்சே வேண்டாம். சூக்கும சரீர (நுண்ணுடல்) நிலையை யொட்டி அது நிற்றலான், மனிதன் சூக்கும சரீரத்தைப் பண்படுத்திக் கொள்ள முயல்வானாக. வெறுமையாக "அது; இது" என்று பேச்சில் காலங் கழித்தல் தவறு.

* * *

மனிதனது நுண்ணுடற் செம்மை அவனது வாழ்வைப் பொறுத்து நிற்றலைப் பெரிதுங் கவனித்தல் வேண்டும். வாழ்வு தீயவழியில் நடாத்தப்படின், அதற்கேற்ற வண்ணம் நுண்ணுடல் நிலை அமைகிறது. இதனால் நாம் எண்ணுகின்ற எண்ணங்கள் யாவும் நல்லனவா யிருத்தல் வேண்டுமென்று பெரியோர்கள் அறிவுறுத்திச் சென்றார்கள். நமது எண்ணங்களின் பரிணாமமே நமக்குப் பின்னே அமையும் உடலமென்க. ஆதலால்நமது உள்ளத்தில் தூய எண்ணங்களையே எண்ணி வாழ்வு நடாத்துவோமாக.

* * *

மனிதன் பருவுடல் நீத்ததும் அவனைத் தொடர்ந்து செல்வன அவனது எண்ணங்களே யாகும். இக்கருத்துப் பற்றியே "பற்றித் தொடரும் இருவினைப் புண்ணிய பாவமுமே" என்று பட்டினத்தடிகள் உலகிற்கு அறிவுறுத்திப் போந்தார்கள். பருவுடலை விடுத்து நுண்ணுடல் நீத்ததும், அந்நுண்ணுடல் யாண்டுச் செல்கிறது? அச்செலவு அவரவர் எண்ணங்கட் கேற்றவாறு அமையும் நுண்ணுடல் நிலையை யொட்டி நிற்கிறது. பருவுடலை விடுத்துப் பிரியும் நுண்ணுடலின் படங்கள் இப்பொழுது மேல்நாட்டறிஞர் சிலரால் பிடிக்கப்பட்டிருக்கின்றன. அப்படங்களை நோக்குழிப் பலதிற நிறங்கள் காட்சி யளிக்கின்றன. எண்ணங்கட்கு நிறம் உண்டு என்று மேலே சொல்லப்பட்டிருக்கிறது. அந்நிறம் நுண்ணுடலில் படிகிறது. எண்ணங்கட்கேற்றவாறு அமையும் நுண்ணுடல் தன்னியல்புக்கேற்ற உலகங்களில் புகுகிறது. இம்மண்ணுலக மல்லாத மற்றவுலகங்களின் இருப்பும், அவைகளில் உயிர்கள் அவ்வுலகிற்கேற்ற உடலங்கள் பெற்று வாழ்வதும் வான சாஸ்திரிகளால் நாளுக்குநாள் புதிது புதிதாகக் காணப்பட்டுவருகின்றன. இம்மண்ணுலகில் மனிதன்கொண்ட வாழ்வையொட்டி அமையும் நுண்ணுடல் நிலைக்கேற்ற வண்ணம் அவ்வத் தத்துவ வுலகம் அவ்வவ்வுடலை ஈர்த்துக்கொள்ளும்.

* * *

ஐந்து பூதங்களால் ஆக்கப்பட்டுள்ள உலகங்களில் ஒவ்வொன்றில் ஒவ்வொரு பூதம் குறைந்தும் மிகுந்தும் நிலவும். நாம் வாழும் இவ்வுலகம் மண்ணுலகமென்று சொல்லப்படுகிறது. இவ்வுலகில் ஏனைய பூதங்களில்லையோ? மற்றப் பூதங்களுமுண்டு. ஆனால் இவ்வுலகில் மண்கூறு அதிகமாயிருக்கிறது. ஒரு கல்லை யெறிந்தால் அக்கல் மீண்டும் இம்மண்ணில் வந்து வீழ்வது காண்கிறோம். காரணமென்னை? கல்லில் மண்கூறு மிகுதியா யிருத்தலேயாகும். இனம் இனத்தை ஈர்த்துக் கொள்கிறது. புகைக்கூடு, ஆகாய விமானம் முதலியன காற்றிலெழுவதைப் பற்றிப் பூத பௌதிக ஆராய்ச்சி பெருகிவரும் இந்நாளில் விரித்துக் கூறவேண்டுவதில்லை. சுருங்கக்கூறின் மண்கூறு குறைவு பெற்றுக் காற்றுக்கூறு பெருகியதும் பொருள்கள் மேலெழும்புவது இயல்பு.

* * *

கற்பூரத்தைக் கொளுத்தித் தலைகீழாகப்பிடித்தாலும், நெருப்பின் நாகீழ் நோக்குவதில்லை. நெருப்பு தன் இனமாகவுள்ள உலகங்கள் வழியே நோக்க முயல்கிறது. "மரணத்தின்பின் மனிதன் நிலை" "நுண்ணுடல்" முதலிய பெயர்கள் தாங்கி வெளி வந்துள்ள (மேல்நாட்டு மனோதத்துவப் புலவர்கள் எழுதியுள்ள) நூல்களில் எண்ணங்களின் நிறம், நுண்ணுடல் நிலை, அதுபின்னே அடையும் உலகங்கள் முதலியன ஒல்லும் வகை விளக்கமாக ஓதப்பட்டிருக்கின்றன. அந் நூற்றுணைகொண்டு திருமூலர் முதலியோர் அருளிய திருமந்திரம் முதலிய நூல்களை ஆராய்ந்தால் பல நுட்பங்கள் உணரலாம். மேல் நாட்டில் அவ்வாராய்ச்சி பெருகப் பெருக உலகில் அறிவும் அன்பும் வளரும்.

* * *

பருவுடல் நீத்ததும் நுண்ணுடல் புகும் உலகங்களுண்மையால் மனிதன் தன்வாழ்வு இவ்வுலக அளவோடுமுடிந்துவிடுகிறது என்று கருதிக்கேடுறு திருப்பானாக; தனது பின்னிலையை ஒல்லும் வகை கல்வி கேள்விகளான், பூதபௌதிக ஆராய்ச்சியான், ஆராய்ச்சியாளர் சுட்டுறவான், ஒரு புடையாதல் உணர்ந்து உய்யுநெறி பற்றி ஒழுக முயல்வானாக. அம்முயற்சியில் தலைப்படுவதே மனிதனது தலையாய கடமை. அக்கடனாற்றப் புகுவதே தவநெறியிற் புகுவதாகும். இத்தவத்துக்கென "அதை விடுத்தல்" "இதைத் துறத்தல்" முதலியன வேண்டுவதில்லையென்று சென்ற வாரம் எடுத்துக்காட்டப்பட்டதை அன்பர்கள் கவனித்திருப்பார்கள். எவரெவர் இயல்புக்கு எவ்வெத் தொழின் முறை பொருந்துகிறதோ அவ்வத் தொழின் முறையிலிருந்து கொண்டே அவரவர் தவஞ்செய்து கொண்டிருக்கலாம். தொழின் முறைகளிலும், வாழ்வுத் துறைகளிலும், பிறவற்றிலும் பொய் பொருமையின்றி, நீதி ஒழுக்கம் முதலியவற்றைக் கோடல் தவத்துக்குக் கால் கொள்வதாகும். தவம் தவம் என்பது வேடமன்று; கோலமன்று; மூட்டு யோகமன்று. பொய் பொருமைகளை யொழித்து நீதியொழுக்க நெறிநின்று அன்பை வளர்க்க வளர்க்கப் பிறவுயிர்க்குந் தன்னுயிர்க்கும் வேற்றுமை தோன்றாது. அவ்வேற்றுமையற்ற ஒரு நிலையே தவநிலையென்க. உயிர்கட் குறுகண் செய்யாது செந்தண்மை பூண்டொழுகலே தவமாகும். இத்தவ நெறியே மக்கள் வாழ்வில் பெறுதல் வேண்டும். இதுபற்றியே "தலைவா உன்னை வேண்டிக் கொள்வன் தவ நெறியே" என்று வன்றொண்டர் ஆண்டவனை நோக்கி வேண்டி நின்றார்.

* * *

எவ்வுயிரையுந் தன்னுயிர் போல் கருதி ஒல்லும் வகை செந்தண்மை பூண்டொழுகிய ஒருவனது நுண்ணுடல், பருவுடல் விடுத்து நீத்ததும் இன்பத்தில் திளைக்க ஒருலகம் புகும். ஆண்டிருந்து அவ்வுயிர் பெறும் நிலையைப் பற்றிய பேச்சே வேண்டாமென்றுமேலே குறிப்பிட்டிருக்கிறேன். வெறும் பேச்சு எற்றுக்கு? இவ்வுலகில் நல்வாழ்வு நடாத்த வேண்டுவது நமது கடன். அக் கடனாற்றுவோமாக. அக்கடனாற்றுதல் எளிதோ என்னும் ஐயமும் அச்சமும் பிறத்தல் இயல்பு. அவ்வையமும் அச்சமும் வேண்டாம். மனிதனால் ஆற்றக்கூடாத வினை இவ்வுலகில் ஒன்றுமில்லை. மின்சார சக்தியைக்கொண்டு மனிதன் நாளுக்கு நாள் என்னென்ன புதுமைகளைக் கண்டு வருகிறான். அவ்வறிவைப் பொய் பொருமைகளை யொடுக்குந் துறையில் செலுத்தினால், மனிதன் தவநெறி எளிதில் நண்ணக்கூடும்.

இப்பொழுது நாம் உற்றுள்ள நிலைகொண்டு "அந்தோ! தவநெறியா?" என்று எவரும் மருள வேண்டுவதில்லை. மேல்நாட்டு வாணிபத்துறைகளும், அத்துறை வளர்ச்சிக்கென அந்நாட்டார் வகுத்துள்ள ஆட்சி முறைகளும், போர் முறைகளும், கண்டுவரூஉங்கருவிகளும், தேர்தல் விழாக்களும், பிறவும் இனித் தவநெறிக்கு இடந்தரல் அரிது அரிது என்று பலர் கூற யான் கேட்டிருக்கிறேன். மறத்துறைகளின் சூழலும் விரைவும் முனைப்பும் மக்களை அவ்வாறு கருதச் செய்கின்றன. அம் மறத்துறைகள் இயற்கை அன்னையின் அருளால் ஒரு கொடியில் வீழ்ந்துபடுங் காலம் வரினும் வரும். ஆகவே மறத்துறைகளின் எழுச்சி கண்டு மயங்கி அவைகட்கு இரையாதல் ஆண்டகைமை யன்று.

* * *

என்றும் ஒரு பெற்றியா யிருப்பது தவநெறியேயாகும். இத்தவ நெறியே ஆங்காங்குத் தோன்றிய ஆன்றோர்களால் அறிவுறுத்தப்பட்டது. அவ்வான்றோர் மொழிகளின் திண்மையை நாம் மறத்தலாகாது. அவர் மெய்யுரைகளில் உறுதிகொண்டு இவ்வுலகில் நல்வாழ்வு நடாத்தவே நாம் முயலல் வேண்டும். நல்வாழ்வென்பது நல்லெண்ணத்துடன் வாழ்வதேயாகும். நல்லெண்ணத்துடன் வாழும் வாழ்விற்குக் கேடு சூழத்தக்க பலதிற இடையூறுகள் இவ்வுலகிலுண்டு. அவ்விடையூறுகட்கு நாம் எளிதில் இரையாகவுங்கூடும். அவ் விடையூறுகட்கு எளியராகாத வழியில் நிற்க மனதை உறுதிப்படுத்த உழைத்தல் வேண்டும். "உழைத்தல் வேண்டும்" என்று சொல்வதெளிது. அதைச் செயலில் நிகழ்த்துவதோ?

* * *

முதலாவது உணவைக் கட்டுப்படுத்தல்வேண்டும். "உணவுக்கேற்றகுணம்" என்பது கீதாசாரியார் திருவாக்கு. மனிதன் தன்னியல்புக்குப் பொருந்தாத உணவுகளை யுண்டு தன்னைக் கெடுத்துக் கொள்கிறான். புலால், மனிதனுக்குப் பொருந்திய உணவன்று. புளிகாரம் முதலிய கூட்டுகளும் பொருந்தியனவல்ல. பசிக்கென ஏற்பட்ட உணவுப்பொருள்களை நாச்சுவைக்கென மனிதன் மாற்றிக்கொண்டான். உணவு முறைகளைப் பற்றிய விரிவுரை ஈண்டு வேண்டுவதில்லை. மனிதன் பொருந்திய உணவு உண்ணக்கடவன் என்று கூறுமளவில் நின்றுவிடுகிறேன். சுருட்டு சிகரெட் பீடி பொடி முதலியனவும் மனிதனது இயல்பைக் கெடுப்பனவாம். காபி டீ முதலியனவும் பொருந்திய பானத்தின் பாற்பட்டனவல்ல. கள்ளை ஈண்டுக் குறிக்கவும் வேண்டுமோ? இவைகளெல்லாம் மனிதனை இராஜத தாமத குணங்களில் அழுத்தி அவனது எண்ணங்களைப் பேய்வாய்ப் படுத்துகின்றன. ஆதலால் முதலாவது மனிதன் தவநெறிக்குப் பொருந்திய உணவு உண்ணப் பயில்வானாக.

(தொடரும்)

# மெய்யகம்

## மூச்சின் தத்துவம்

திருவாளர் கா. சி. சிவசங்கர முதலியார் அவர்கள் எழுதியது:—

(தொடர்ச்சி)

பழைய மருத்துவ நூல்களில் காணப்பெறாத நோய்களெல்லாம் இக்காலத்தில் பெருகுகின்றன. மருத்துவரோ மலிந்துவிட்டனர். மருந்தோ கடைச் சரக்காயிற்று. இளமையிற் சாவோ இயல்பாகி விட்டது.

இவைகள் நீங்கி மக்களுக்கு நோயற்ற மெய்யும் நீடித்த ஆயுளும் வேண்டுமாயின் காற்றை யுட்கொள்ளும் வழியை யுணர வேண்டும்.

"வாயுவினு லாய வுடம்பின் பயனன்றே
ஆயுவி னெல்லை யது"

"வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கி
லாயுட் பெருக்க முண்டாம்"

—ஔவை குறள்.

திறந்த வெளிகளில் நாட்டுப்புறங்களில் பயிர்த் தொழிலோ, தோட்ட வேலையோ, கைத் தொழிலோசெய்கின்ற மக்கள், கூடிய வரை காற்றையுட் கொண்டு நோயற்றிருக்கின்றார்கள். நகரங்களிலே மூடிய கட்டிடங்களிலுள்ளே நாள் முழுதும் எழுதிப் படிக்கக் குனிந்திருக்கின்றோரே நரம்புத்தளர்ச்சி, கைகால் சில்விடல், இனிப்பு மூத்திரம், மலப் போக்கு, மலத்தளர்ச்சி, மலச்சிக்கல், தலை நோய், மயக்கம், வெப்ப நோய், இளைப்பு, பெருவயிறு, கை காலோச்சல், உடம்பு நோய், ஈளை, இருமல், சளி, பசியின்மை, அதிதாகம், வயிற்று நோய், வாந்தி முதலிய கொடிய நோய்களைப் பெற்று, மருத்துவர்க்குப் பெரும் பொருள் கொடுத்து மருந்துண்டு இளமையிலிறக்கின்றனர். எல்லா நோய்க்கும் ஒரே மருந்து தூயகாற்றை உடம்பில் நிரப்புவதே. நான் சென்னை நகரில் ஆங்கில வியாபாரிகளிடத்தில் எழுத்தாளனாய்த்தொழில்செய்துகொண்டிருந்த காலத்திலே தூக்கமின்மை, மயக்கம், நரம்புத்தளர்ச்சி, நாடி, படபடப்பு, மலமூத்திரப் போக்கு மிகுதி, மேல்மூச்சு முதலியவைகளால் வருந்த நேர்ந்து ஆங்கில மருத்துவரிடம் மருந்துண்டேன். அம்மருத்துவரில் பேர்பெற்ற கோமனும் ஒருவர். இம்மருந்துகளெல்லாம் என்னுடம்பைப் பருக்க வைத்தனவேயன்றி வேறொன்றும் நன்மை செய்தனவல்ல. இனி மருந்தையும் மருத்துவரையும் நம்பக்கூடாதெனத் துணிவுகொண்டு வேலையை விட்டுவிட்டு நாட்டுப்புறமடைந்து நானாகவே உணவாலுங் காற்றாலும் நீராலும் சூரிய வெப்பத்தாலும் சுகமுறலாமென்று ஒரு கிராமத்தை யடைந்தேன்.

"தனக்குத் துணையாவார்
வேண்டுமென் றெண்ணித்
தனக்குத் துணையாவார்
தாந்தெரிதல் வேண்டாம்
தனக்குப் பிறர்செய்வ
துண்டோமற் றில்லை
தனக்கு மருத்துவன்
றான்"

—நாலடியார்.

என்கிற வெண்பாவே எனக்குத் துணிவை யுண்டாக்கிற்று.

## வீண் பயம்

மூச்சுப் பழக்கத்தைப்பற்றி இளம்பருவத்திலேயே எனக்காசையுண்டு. ஆனால் அதை முறைப்படி கற்றுக் கொடுப்பாரகப்படாமையால் என் விருப்பப்படி ஒரு மூக்கை அடைத்து மற்றொரு மூக்கால்விட்டு இழுப்பதும் மற்ற மூக்கையடைத்து முன்னடைபட்ட மூக்கால்விட்டு இழுப்பதுமாக இருந்தேன். இப்பழக்கத்தில் துணிவுண்டாகாமல் ஐயப்பாடே அதிகமாயிருந்தது. பலர் இப்பழக்கம் முறை தவறினால் மண்டை வெடிக்கும், மார்பு பிளக்கும், அண்டம் கிழியும் என்று பயமுறுத்தினார்கள். ஒரு நாள் விலங்கற்பட்டில் ஒரு பெரியார் இருப்பதாய்க்கேட்டு அவரைக் காணச்சென்றேன். அவர் பெயர் வீரவைராக்கிய யோக மஸ்தான். அவரிடம் சில காலம் பழகிய பிறகு அவர் செய்யும் மூச்சுப் பழக்கத்தை யணுகி நோக்கித் தெளிவு பெற்றேன். அவர் மூச்சை யிழுக்கும்போது உண்டாகும் ஒலி வெகு தூரம் கேட்கும். இவரிடம் பழகிய பிறகு மண்டை பிளக்கும் மார்பு வெடிக்கு மென்ற பயம் நீங்கிற்று. அவர்பால் சிறிது சிறிதாய் எனக்கிருந்த ஐயங்களை நீக்கிக்கொண்டேன். பின்னர் தாராபுரம் முத்துச்சுவாமிகள் என்கிறஒரு யோகியைக் காணநேர்ந்தது. அவரை என்னுடன் சில காலம் வைத்துக்கொண்டு மூச்சுப் பழக்கத்தில் பயின்று வந்தேன். அவர் தான் எனக்கு ஔவைக்குறளின் சிறப்பை விளக்கியருளினார்.

இக்காலத்தில் நகரமக்கள் உணவாலேயே உடம்பும் உயிரும் வளர்கின்றனவெனக் கருதி, காலை எழுந்திருப்பது முதல் இரவு உறக்கம் வரும் வரை, காப்பி, தேநீர், பலகாரங்கள், சோறு கறி, ரொட்டி, பூரி, பீர், ஒயின் முதலியவைகளால் வயிற்றை ஓய்வின்றி நிரப்பிக்கொண்டேயிருக்கின்றார்கள். அவ்வுணவு நன்றாய் எரிந்து பக்குவப்படுவதற்கு மாறாக உடம்பிலுள்ள தீயை அவித்து உயிரை விரைவில் போக்கிவிடுகின்றது.

"தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்"—திருவள்ளுவர்.

## இறைவன் திருவடி நீழல்

வயிற்றிலுள்ள உணவு முற்றும் அற்ற பிறகு குறைந்தது மூன்று மணி நேரமாவது வயிற்றைக் காயப் போட வேண்டும். அப்படிக் காய்கின்ற காலமே மூச்சுப்பழக்கத்திற்குத் தகுந்த காலம். காலையில் உறக்கம் நீங்கியவுடனே கமலாசனமிட்டுட்கார்ந்து உந்தியை உள்ளுக்கிழுத்து உள்ளே நாடிகளிலுள்ள காற்றை யெல்லாம் வெளியாக்கி நாடிகளைத் தூய்மையாக்கி தூயவெளிக்காற்றை (உந்தியை வெளி விட்டு) உள்ளுக்கிழுத்துப் பல முறை இதுபோல் திருத்தி யடித்து உயிரொளியை, உயிர் விளக்கைத் தூண்டி, ஐந்தெழுத்தையுந் தனித்தனி யோதி ஐந்து படைவீட்டின் வழிகளையுந் திறந்து காற்றையுட் செலுத்திவர ஓங்கார வீணையிலுள்ள எட்டும் இரண்டும் அல்லது அகார உகாரம் அல்லது வெட்டாத சக்கரம் முடிந்து கட்டாத இலிங்கம் என்கிற உறுப்புகளிரண்டும் ஒழுங்காக நிற்கும். அப்போது, ஊமை எழுத்து என்றும், பேசாத மந்திரம் என்றுஞ் சொல்லும் எழுத்தை இசைக்க வொட்டாத சக்கரத்தில் கட்டாத இலிங்கம் அமையும். உயிர்த் தலைவன் ஒளி வடிவம் நெற்றிக்கு நேரே கதிர் விட்டொளிரும். அவன் திருக்கூத்து நாடிகளிலெல்லாம் விளங்கும். அவன் சிலம்பொலி செவிப் புலனிற்கேட்கும். இதைத் தான் "ஓங்காரத்துள் ளொளிக்குள்ளே முருகன் உருவங் கண்டு தூங்கார்" என்று அருணகிரியாரும் "ஓவறவிமைக்குஞ் சேண் விளங் கவிரொளி" என்று நக்கீரரும், "காலுந் தீபம் மின்னல் பந்தங் கடிகூர் விரிசு கதிர் மதி போல் காட்டும் ஒளியாய் இவையாவுங் கடந்தாங் கழிவில் பேரொளியாய் சாலவிளங்கும் விந்துவெனுந் தடமாமயிலோய்" என்று சிதம்பர சாமிகளும் விளக்கி யருளினார்கள். இத் தோற்றத்தைக் கண்டு உள்ளம் அசைவற் றிருப்பதுதான் மக்கள் இறைவன்றிருவடி நீழ லடைவது.

## பெரியோர் வாக்கு

இதை நேரே கண்டவர்களே யொப்புக்கொள்ளுவார்கள். எட்டுப் படிப்பளவிலே நிற்கின்றோர், 'பரிமேலழகருக்கு மேலே இவர் படித்தவரோ, அவர் உரையை இவர் மறுக்கின்றாரே, அவர் நிலமிசை யென்பதற்கு வீட்டுலகு என்று உரையெழுதியிருக்க, இவர் இந்நிலவுலகே யென்றுகூறுவது பொருந்துமா'வென்று வாதமிடுவார்கள். உடம்பில் ஆறுடையான் இன்பக்கூத்தைக் கண்ட பெரியார்க்கு இந்நிலவுலகே வீட்டுலகாக இறைவன் திருவடி நீழலாக மாறுகின்றது என்பதை, அப்பரை அமணர் நீற்றறையிலிட்ட ஞான்று அவர் பாடிய,

"மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும் [தே
மூசு வண்டறைப் பொய்கையும் போன்ற
ஈச னெந்தை யிணையடி நீழலே"

என்ற தேவாரப் பாவாலும்,

"நாமார்க்குங் குடியல்லோம்
நமனை யஞ்சோம்
நரகத்தி லிடர்ப்படோம்
நடலையில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம்
பணிவோமல்லோம்
இன்பமே யெந்நாளுந்
துன்பமில்லை
தாமார்க்குங் குடியல்லாத்
தன்மையான
சங்கரனற் சங்கவெண்
குழையோர் காதிற்
கோமாற்கே
நாமென்றும் மீளாவாளாய்க்
கொய்ம்மலர்ச்சே வடியிணையே
குறுகி னோமே"

என்ற மற்றொரு பாவாலும்,

"வஞ்சகமன் வாதனைக்கும்
வன்பிறவி வேதனைக்கும்
அஞ்சி யுனையடைந்தேன்
ஐயா பராபரமே"

என்ற தாயுமானார் வாக்காலும் என் கூற்றை மெய்ப்பிக்கத் துணிகிறேன்.

"வானாகி மண்ணாகி
வளியாகி யொளியாகி
ஊனாகி யுயிராகி
யுண்மையுமா யின்மையுமாய்
கோனாகி யானெனதென்
றவரவரைக் கூத்தாட்டு
வானாகி நின்றாயை
யென்சொல்லி வாழ்த்துவனே"

என்ற திருவாசகத்தை யுணர்ந்தோர் இறைவன் திருவடி நீழலை இந்நிலவுலகத்திலேயே யடைகின்றார்கள்.

# கிராமங்கள்

"ஏல விவசாயி" ஆசிரியர் தேவாரம் திரு. R. நாராயணஸ்வாமி செட்டியார் எழுதியது:—

(தொடர்ச்சி)

மிராசுதாரர்களே! உங்கள் பண்ணையாட்களின் எளிய நிலைமையைக் கவனிக்க முன் வாருங்கள். அவர்களுடைய சுகதுக்கங்களை உங்களுடையவைகளாகப் பாவித்து, அவர்களின் பொருளாதாரம், சுகாதாரம், கல்வி முதலியவைகளைக் கவனித்துக் குறைகளைப் போக்கி, அவர்களிடம் கருணை காட்டுவீர்களேயானால், அவர்கள் ஊக்கத்துடன் வேலை செய்வார்கள்; உங்களிடம் அன்பு பூண்டு ஒழுகி, விசுவாசமா யிருப்பார்கள். அவர்களிடம் வறுமை ஒழிந்து, செல்வம் விருத்தியாகும்; நோய்கள் நீங்கி சௌக்கியத்துடன், சந்தோஷத்துடன் வாழ்வார்கள். கல்வி பெருகும்; சமாதானம் நிலவும். ஆகையால் உங்களுடைய கடமைகளை இப்பொழுதே செய்யம்புறப்படுங்கள்.

நமது துன்பத்திலும் இன்பத்திலும் சரிபங்குடைய நமது சகோதரிகள் அடிமைப் படுத்தப் பட்டிருக்கிறார்கள். கிராமங்களில் இவர்களின் நிலைமை பரிதாபம்! பரிதாபம்!! பெண்மணிகளுக்குக் கல்வி கொடாமல் அந்தகாரத்தில் அடைத்து வைத்திருந்தால், தேசம் முன்னேற்றம் அடைவதெப்படி? எத்தேசத்தில் பெண்களை மரியாதையுடன் நடத்து கின்றார்களோ அத்தேசம் சீருடனும் சிறப்புடனும் இருக்கிறது. அநேக ஞானிகளையும், வீரர்களையும் பெற்றெடுத்த ஞானத் தாய்மார்கள் வழி வழி வந்த நமது அன்னைகளைச், சகோதரிகளை அடிமையாக வைத்திருப்பது கேவலம்! கேவலம்!! பட்சிகளும் மிருகங்களும் தத்தம் பெண்ணினங்களை எவ்வாறு காப்பாற்றிக் களிப்பிக்கின்றன. கவனிக்க! கவனிக்க! இமாலயத்தில் சிவனும் கன்னியா குமரியில் சக்தியும் கோயில் கொண்டெழுந்தருளியிருப்பதின் தத்துவம் கவனிக்கத்தக்கது. முற்காலத்தில் பெண்கள் மிகவும் கௌரவமாக நடத்தப்பட்டார்கள்.

பண்டை நாட்களில் நமது ஸ்திரீகள் கல்விகற்று வித்வாம்சைகளாகவும் பண்டிதைகளாகவும் விளங்கி, தத்தம் புருஷர்களில்லாத பொழுது தங்கள் மக்களுக்கும் சிஷ்யர்களுக்கும் வித்தை போதித்து வந்தார்களென நாம் நூல்களின் மூலமாயறிகிறோம். மண்டன மிசிரருக்கும் சங்கரருக்கும் சாஸ்திர வாதம் நடந்த பொழுது நியாயத் தலைவியாக விளங்கியது மண்டன மிசிரரின் பாரியல்லவா? கார்க்கியும் சாவித்திரியும் அவர்களுடைய கல்விக்காகப் பேர் போனவர்களல்லவா? பிரம சூத்திரத்திற்கு வியாக்கியான மெழுதுகையில் பாமதி அவருடைய பர்த்தா வாசஸ்பதி மிஸ்ரருக்குக் கல்வியில் உதவி செய்தபடியால், அந்நூலுக்கு பாமதி பாஷ்யம் என்று பெயரிடப்பட்டது. யாக்ஞவல்கியர் தமது பாரி மைத்திரேயிக்குத் தத்துவங்களின் மர்மங்களை வெளியிட்டார். கணித சாஸ்திரமும் தர்க்க சாஸ்திரமும் லீலாவதியால் எழுதப்பட்டன. மஹா பஜபதி அனுபவத்திலும், க்ஷேமா அறிவிலும், தம்ம தின்னா மதப் பிரசங்கத்திலும், பத்த கபிலனி பிரசங்கத்திலும் கீர்த்திபெற்று முற்காலத்தில் புத்த இந்தியாவில் விளங்கினார்கள். மங்கையர்க்கரசியாரின் மாண்புகளும், காரைக்கா லம்மையாரின் ஒழுக்கங்களும், பிறவித் துறவு பூண்ட திலகவதியாரின் இலக்கியங்களும், பொதுமகள் வயிற்றில் குல மகளாய்த் தோன்றி அறமகளாய் விளங்கிய அம்மை மணிமேகலாவின் அறத்தின் மேன்மைகளும், மதன லீலையாரின் கல்வியின் ஆற்றல்களும், வெள்ளி வீதியாரின் கல்வியின் திறனும், நாயனாரின் வாழ்க்கைத் துணைவி வாசுகி அம்மையாரின் ஒப்பற்ற குணாதிசயங்களும், ஸ்ரீவில்லிபுத்தூரில் தோன்றிப் பின்பு அரங்கத்தில் அந்தர்பவித்த ஆண்டாளின் அபார அன்பின் அருமைகளும் பெருமைகளும், "விரல் மந்திரி மதியுடையாள் பெண்" என்று முழக்கிய ஔவைப் பிராட்டியாரின் பெரும் கல்வி ஞானத்தின் வெளிச்சமும் தமிழ் நாட்டாரால் நன்கு அறியப்பட்டவைகள். கிராமம் கிராமமாகச் சுற்றிப் பற்பல பாடல்களைப் பாடிக் கிராம ஜனங்களுக்கு அறிவு அளித்த அருந்தமிழ் ஔவையாரின் உயர் நூற்கள் மணிகளென அன்றும் இன்றும் போற்றப்படுகின்றன.

துர்க்காவதி அசுப்கானுடன் சண்டை நடத்தினர். சுல்தானா சந்த் ஆமதுநகரத்தைக் காப்பாற்றினர். ஜெஸ்வந்த ராவின் மனைவியான ஜளசிபாய் யானையின்மீது ஏறி மஹாராஷ்டிரக் குதிரைப் படையை நடத்தினர். ராணி சம்யுக்தை தம் புருஷனோடு போர்க்களத்துக்குச் சென்றார். தமிழகத்து வீரத்தாய்மார்களின் வீரமும் தீரமும் உலகம் போற்றக்கூடியது. இவைகளைப்போலவே இஸ்லாம் மாதரசிகளும் பெருமைமிகுந்து விளங்கினார்கள். இராஜபுத்திர வனிதா ரத்னங்களும் வீரத்திற்சிறந்தவர்களென்பது வெளிப்படை. இவைகளெல்லாம் நம்நாட்டுச் சரித்திரங்கள். இப்பொழுது இவைகளை அனுபவ முறையில் காண்பதரிதாகி விட்டது.

பண்டைக் காலத்தில் வீர ஆண் மக்களது சன்மார்க்கத்திற்குப் பெண்மக்களே அஸ்திவாரமாக இருந்தார்கள்; அவர்கள் உலக சரித்திரத்தில் உயர்வான இடம் பெறும் பொருட்டுத் தொட்டிலிலேயே பழகினார்கள். மாதாவின் மடியே ஆரம்பக் கலாசாலை. மாதரசிகளின் நடவடிக்கைகளும் ஒவ்வொரு சொல்லும் மக்களின் நல்லொழுக்கத்திற்குக் காரணமாயிருக்கின்றன. கல்வி முதலிய நாகரிகத்தைப் புகட்டுவது ஆணேயாகிலும், ஆணுக்கு உற்சாகத்தையும் தைரியத்தையும் புகட்டப் பெண்களே தகுதியானவர்கள். நமது நாட்டில் மாதர்களெல்லாம் கற்றவர்களா யிருந்தால், அவர்களில் கணக்கற்ற அறிஞர்கள் தோன்றித் தேச நன்மைக்காகப் பல துறைகளிலும் முயற்சிப்பார்கள். நகர ஸ்திரீகள் ஆங்கில நடை உடை ஊண் முதலியவைகளில் விரும்பிக் கொண்டு வருவதையும், கிராமப் பெண்கள் அறிவிலிகளாகி வருவதையும் காண நாட்டுப் பற்றுடைய எவரும் மௌனமாக இருக்க மாட்டார்கள். நமது பெண்கள் அடிமைப்பட்டிருக்கும் வரையில் பாரத தேசம் அடிமைப்பட்டதே என்பதை ஒவ்வோர் இந்தியரும் உணரல் வேண்டும். கிராம முன்னேற்ற வேலையில் பெண்மணிகளுக்கும் அதிகம் பங்குண்டு என்பதை ஒவ்வோர் இந்தியனும் அறிதல் வேண்டும். சில அயல்நாடுகளில் இவர்களைப்பற்றிக் கவனிப்போம். ஜெர்மனியில் சட்டசபையில் பெண்கள் புகுந்து 37 பேருக்கு மேலாக அங்கம் வகித்து வேலை செய்கிறார்கள், துருக்கியில் பெண்கள் முக்காடுகளை ஒழித்துப் பலவித பொது விஷயங்களில் ஈடுபட்டு உழைக்கின்றார்கள். எகிப்திய மாதரசிகளும் பல பாத்தியங்களைக் கொண்டு நாட்டின் நலங்களுக்காக உழைத்து வருகிறார்கள். இந்தியா இதை என்றுதான் கவனிக்குமோ? இங்கும் மாதர் இயக்கம் நத்தை மாதிரி நகர்ந்து கொண்டிருக்கிறது.

இச்சிறு வியாசத்தில் அதிகமாகச் சொல்லி விட்டேனென்று நினைக்கிறேன். ஆயினும் நமது தேச வாலிபர்களுக்கு மட்டும் சுருக்கமாகச் சொல்லிவிட்டு முடித்துவிடுகிறேன். என் பிரிய வாலிபர்களே! இந்தியாவின் செல்வங்களெல்லாம் சிதைந்தன; கலைகளெல்லாம் அழிந்தன. மீதமென்ன இருக்கிறது? சீரையும் சிறப்பையும் சுதந்திரத்தையும் இழந்து தவிக்கும் இந்தியாவிற்கு நீங்கள்தான் செல்வமணிகளாக விளங்குகிறீர்கள். நம் தேசத்திலுள்ள ஏழரை லக்ஷம் கிராமங்களைப் புனருத்தாரணம் செய்வதற்கு யார் முதலாவதாக முன்வரல்வேண்டும்? என்று என்னைக் கேட்டால், வாலிபர்கள் என்று பதில் சொல்லுவேன். இரண்டாவது? வாலிபர்கள். மூன்றாவது? வாலிபர்கள் என்றே மறுபடியும் பதில் கூறுவேன். நம் தேசத்தில் 33 கோடி ஜனங்களில் ஒரு வேளை உணவு உட்கொண்டு மறுவேளை ஆகாரத்திற்காகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கும் சுமார் பத்துக்கோடி ஏழைமக்களின் துன்பங்களை யெல்லாம் தீர்க்க வேண்டியவர்கள் நீங்களே. தேசத்தில் நூதன உணர்ச்சி உண்டாக்கக் கூடியவர்கள் நீங்களே. சாதியெனும் படுகுழியில் பாய்ந்து மதமென்னும் மமதைக்காளாகாது, சாஸ்திரச் சண்டை, கோத்திரச் சண்டை, மசூதி முன் மேளச் சண்டை, பசுவதைச் சண்டை முதலிய சில்லரை விஷயங்களில் ஈடுபடாது, சர்வ சமய சன்மார்க்கம் நிரம்பினவர்களாய்ச் சகோதர உணர்வுகொண்டு, தேசாபிமான மென்னும் இன்ப சாகரத்தில் மூழ்கி, நாட்டிற்கும் சமயத்திற்கும்மொழிக்கும் உறுதியுடன் உழைக்கக் கூடியவர்கள் நீங்களே. உங்கள் உண்மையான உழைப்பால் இந்தியாவிற்கு விடுதலை யளிக்கக் கூடியவர்கள் நீங்களே. வாலிபர்களில் 100க்கு 90 பேர்களுக்கு மேல் கிராமங்களில் வசிப்பதால், நாட்டின் நலத்திற்காகத் தீவிரமாக உழைக்கத் தகுதியுள்ளவர்கள் இளம் இந்தியர்களாகிய நீங்களே.

இராஜ போகங்களையும் தமது உயிரினும் இனிய மனையாளையும் இளமையில் துறந்து, சர்வ சங்கப் பரித்தியாகம் செய்து விட்டு உலகில் ஜீவகாருண்ய நலம் செழித்தோங்க உழைத்தார் சாக்கிய சிம்ஹனார். அன்பு மதத்தை ஸ்தாபித்து, சுவிசேஷ வேலைக்காகவே தமது ஜீவியத்தை அர்ப்பணம் செய்தார் இயேசு நாதர். ஞான சுந்தரரும் நாவுக்கரசரும் யௌவனர்களே. வீர பத்தினியான கண்ணகியாரும் திலகவதியாரும் அப்படியே. கண்ணனது பிரேமையில் ஈடுபட்டு யௌவனத்தில்உலக இன்பங்களைத் தியாகம் செய்தார் சைதன்யர்.

தயானந்த சரஸ்வதி, இராஜாராம் மோகன் ராய், கேசவ சந்திரசேனர், இராமகிருஷ்ண



பரமஹம்ஸர், விவேகானந்தர், இராம தீர்த்தர், பிரேமானந்த பாரதி முதலிய நவ இந்தியாவின் மதாபிமானிகள் ஆவேசம் உங்களுக்குண்டாகிக் கொதித்துக் கொண்டிருக்கவில்லையா? தாதாபாய், திலகர், கோகலே, தாஸ், அஜ்மல்கான், அலிசகோதரர்கள், லஜபதி, சரோஜனிதேவி, மகாத்மா காந்தி முதலிய தேசபக்தர்களின் ஆவேசம் உங்கள் நரம்புகளில் மின்சாரம் போன்று பாய்ந்து உங்கள் இரத்தம் கொதிக்கவில்லையா? ஒருதேசமோ சமூகமோ உயர்வதற்கும் தாழ்வதற்கும் அத்தேச வாலிபர்களே காரணர். ஆதிகாலத்தில் நமது தேசத்தில் வாலிப உணர்ச்சி மிகப் பரவி யிருந்தது. ஒவ்வொரு தேசத்தின் சுதந்தரப்போரிலும் இயற்கையரசியின் சக்தியால் வாலிபர்கள் ஏற்ற காலத்தில் ஈடுபட்டு வேலை செய்தார்கள். பாரத யுத்தத்தில் தருமயுத்தவெற்றிக்காகத்தனது உயிரை அரவான் அர்ப்பணம் செய்தான். இதைப்போன்ற பல உதாரணங்கள் உண்டு.

ஐரோப்பிய தேசங்களை நடுங்கும்படி செய்து, பிரான்சு ஏகாதிபத்தியத்தை ஸ்தாபித்தது வாலிபராகிய நெப்போலியனே. மாஜினி, கரிபால்டி முதலிய இத்தாலியத் தேசாபிமானிகளைத் தாங்கி நின்று இத்தாலியில் கிளர்ச்சி செய்தவர்கள் அந்நாட்டு வாலிப மக்களே. நமது இந்தியாவின் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு ஒத்துழையாமைக்காலத்தில் சிறைக்கூடம்சென்று தியாகம் செய்தவர்களில் பெரும்பாலோர் வாலிபர்களே. சீனத்தின் சுதந்திரப் போரில் ஐக்கியப்பட்டு உழைத்தார் வாலிபர் சன் யாட் சென். அயர்லாந்து சுதந்திரப் போராட்டத்தில் முன்னணியில் நின்று வேலை செய்த இளம் ஐரிஷ்காரரின் உதவிகளைக் கொண்டே வெற்றி பெற்றார் டெவலரா. எகிப்திய ராஜீய சுதந்தரக் கிளர்ச்சியில் வாலிபர்கள் முன் வந்து தலைவர் ஜக்லுல் பாஷாவிற்குப் பேருதவி பலவும் அளித்துப் பல தியாகங்களைச் செய்தார்கள். அங்கோரா அரசாங்கத்தை ஸ்தாபிப்பதற்கு முஸ்தபா கமால் பாட்சாவுக்கு உதவியாயிருந்தவர்கள் இளந்துருக்கியர்களே. ஜெர்மனியின் சீர்கேடான ஆட்சி முறையை ஒழிப்பதற்குத் திறமையாகப் போராடியவர்கள் ஜெர்மானியவாலிபர்களே.

உலகத்தின் அரிய பெரிய காரியங்களெல்லாம் யாரால் செய்யப்பட்டன என்று கேட்டால், உலக சரித்திரம் வாலிபர்கள், வாலிபர்கள் என்று பதிலளிக்கிறது. நீங்கள் ஆவேசத்துடன் நிமிர்ந்து நின்றால், இந்தியாவின் கஷ்டங்களெல்லாம் சூரியனைக் கண்ட பனி போல் உடனே ஓடிப்போய் விடும். கிராமங்களை அடிப்படையாகக் கொண்டு ஞான இந்தியா - தரும இந்தியா - செல்வ இந்தியா - நவ இந்தியா உங்கள் தியாகத்தால்தான் கட்டப்பட வேண்டும். மாறுதல் உண்டாவது உலக இயற்கையாயிருக்கிறது. இந்தியா மாறுதலடையுங் காலம் வந்துவிட்டது. "இந்தப் பொன் போன்ற சமயத்தை நன்றாய் உடனே உபயோகித்து, தேசத்தை உங்களிஷ்டம் போல் மேன்மையாகச்செய்து கொள்ளுங்கள்" என்று சந்தர்ப்பம் உங்களைக் கூவி அழைப்பதைக் கேளுங்கள்! கேளுங்கள்! தர்ம சேவகர்களே, உங்கள் வாழ்க்கைகளை யெல்லாம் அர்ப்பணம் செய்து, ஒற்றுமையுடன் தைரியத்துடன் உழைத்து இந்தியாவை உலகத்தின் மகுடமணியாகச் செய்வது உங்கள் கடமையென்று கருதுங்கள்.

நமது பரதகண்டத்தில் $7\frac{1}{2}$ லட்சம் கிராமங்களுக்கு மேலிருக்கின்றன. நமது சென்னை இராஜதானியில் மட்டும் கிட்டத்தட்ட 40,850 கிராமங்கள் உண்டு. தமிழ் நாட்டில் மட்டும் சுமார் 25,000 கிராமங்கள் இருக்கின்றன. கிராமங்களைக் கொண்டே நம் நாடு ஆக்கப்பட்டிருப்பதால், கிராம நிர்மாணமே தேச நிர்மாணமாகும். நகர அபிவிருத்தியாலும், நாகரிகத்தாலும் நாடு உண்மையாகவே ஒருகாலும் உயர்வடைய மாட்டாது! ஆகையால் நகரவாசிகளும் கிராமவாசிகளும், சிறியோரும் பெரியோரும், உத்தியோகஸ்தரும் உத்தியோகமற்றோரும், கற்றோரும் கல்லாரும், எல்லோரும் கிராமத் தொண்டில் ஈடுபட்டு வேலை செய்ய உடனே தயாராக வேண்டும். கிராமங்களின் தன்மைகளை நன்கு அறிந்த தேசாபிமானிகளும், பொது நலத் தொண்டர்களும் தீவிரமாக வேலை செய்ய உடனே புறப்பட வேண்டும். கிராம சேவைக்கு என்ன வேண்டும்? அனுதாபம்! உழைப்பு! உறுதி! தியாகம்!

---

சென்னைப் போலீசார் 35 வயதுள்ள மீனாட்சி என்பவளையும் வேறு இருபெண் பிள்ளைகளையும் கைது செய்திருக்கிறார்கள். அவர்களிடமிருந்து சுமார் இரண்டாயிரம் ரூபாவுக்கு நகைகளும் பணமும் கைப்பற்றப்பட்டனவாம். அவர்கள் ஊர் ஊராய்த் திரிந்து கள்ளத்தொழில் புரிந்தவர்களென்றும் ஏற்கனவே தண்டனையடைந்தவர்களென்றும் கூறப்படுகின்றது.

# கம்பரைக் கற்கும் முறை

(பி. ஸ்ரீ)

## அவதார ரகசியம்

(தொடர்ச்சி)

'அரக்கரில் வீரர் மற்று யாரே?' என்று கம்பர் அரக்கரது வீரத்தையும் வியந்து பாராட்டுகின்றார். இராவணன் இந்திரசித்தன் ஆதியோர் வீரம் இராம லட்சுமணர் வீரத்திற்கு எட்டுணையும் இளைத்துக் காணப்படுவதில்லை. எனினும் இராம - வீரத்திற்கும் இராவண - வீரத்திற்கும் அடிப்படையிலேயே வேறுபாடுண்டென்பது கம்பர் மதம். இராமனது வீரம் அறம் வளர்க்கும் வீரம்; இராவணனது வீரம் முறை துறந்த வீரம் என்று கவி காட்டுகின்றார். 'காதலித்த உருவாகி அறம் வளர்க்கும் கண்ணாள'னாகக் கம்ப-ராமன் நம் கண் முன் வருகின்றான். கம்ப-ராவணனோ அரக்கர் புரவலனாகவும் அலகிலோக பயங்கரனாகவும் சித்திரிக்கப் பெறுகின்றான். உலகமெலாம் ஒருயிராகக் கண்டு மக்களுள்ளங்களை அறநெறியில் மகிழ்விக்கும் வீரராமனது இலட்சியத்தைப் பின்வரும் செய்யுள் வெளியிடுகின்றது.

"நிறப்பெரும் படைக்கலம் நிறத்தின்நேருற
மறப்பயன் விளைக்குறும் வன்மை யன்றரோ
இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்
துறப்பிலர் அறமெனல் சூரராவதே"

இப்பாட்டு நுணுகி நோக்கத்தக்கது.

* * *

## இராமனது வீர லட்சியம்

"போர் முனையில் பயங்கரமான படைக்கலம் நெஞ்சுக்கு நேராக வருகின்றது. நெஞ்சு அச்சத்தால் படபடவென்று பறையடிக்கவில்லை. வீரன் முன்வைத்த காலைப் பின் வாங்காது நின்று சாகசத் தொழில்கள் புரிகின்றான். இத்தகைய வன்மையினை நான் சூரத்தனமென்று மதிப்பதில்லை" யென இராமன் கூறுகின்றான். என்னை? இத்தகை வீரம் இரக்கமிலா அரக்கரிடத்தும் காணப்படுமன்றோ? இராமன் பேரிலக்காக மதித்தொழுகும் வீரம் எது? போர் வெறி பெறாத காலத்தில், 'இறப்பினும் திருவெலாம் இழப்ப எய்தினும்' அறத்தின் காவலராக-அறத்தின் மெய் வீரராக-நிற்கின்றார் இவர்; அறம் துறந்து அகன்றாரில்லை என்பதே வீரமாவது என இராமன் மதிக்கின்றான். இத்தகைய உயர்வற உயர்ந்த வீரலட்சியத்தோடு வீர வாழ்க்கை வாழும் இராமன், முறை துறந்து உலகினை இருள்விக்கும் போரக்கர்களை இவர் 'பேடிப்போர் வல்லரக்கர்' என்று மதிப்பது பொருந்துவதே யன்றோ?

* * *

## தியாக வாழ்வும் அவதார ரகசியமும்

இராமனது வீரம் தியாகமாக வெளிப்படுகிறது. தியாகமன்றோ, மக்கள் உள்ளத்தில் மறைந்தொளிரும் தெய்வத் தன்மையை விசிறி வெளிப்படுகின்றது! உலகினைப் படைக்கும் வண்ணம் இறைவன் தன்னைத் தானே பலியாகக் கொடுத்தான் என்பது அருமறைப் பொருள். உலகினை நெறிப்படுத்தும் வண்ணம் இராமனும் தன்னைத் தானே பலியாக்க விரும்புகின்றான்.

"யாவர்க் காயினும் எளியவர்க் காயினும்
சாவப் பெற்றவரே தகை வானுறை
தேவர்க்கும் தொழும் தேவர்க ளாகுவார்"

என்று, அரக்கரால் அலைப்புண்டு அல்லற்பட்ட முனிவரை நோக்கி இராமன் கூறுகின்றான். பின்னும் வீடணனைக் குறித்து ஐயம் கொண்ட சுக்கிரீவனாதியரை நோக்கி,

"வெற்றியே பெறுக தோற்க
வீகவீயாது வாழ்க
பற்றுதலன்றி யுண்டோ
புகலெனைப் பகர்கின்றானை"

என்றும்,

"இன்றுவந்து தன்னினுன்
சூழ்ச்சி யாலே
இறந்த நாளன்றோ என்றும்
இருந்த நாளாவது"

என்றும் கூறுகிறான். இத்தகைய தியாக உணர்வு அயோத்தியா காண்டத்தில் அரும்பி, யுத்த காண்டத்தில் கனிவு பெறுகின்றது.

"அள்ளற் பள்ளப் பள்ளப் புனல்சூழ்
அகன்மா நிலமும் அரசும்
கொள்ளக் குறையா நிதியின்
குவையும் முதலா மெவையும்
கள்ளக் கைகே சிக்கே
உதவிப் புகழ்கைக் கொண்ட"

(அயோத்தியா காண்டம்)

வள்ளன்மை யன்றோ முதிர்ந்து முறுகி வளர்ந்து,

"ஆளையா வுனக்கு அமைந்தன
மாருதம் அறைந்த
பூளையாயின கண்டனை
இன்று போய்ப் போர்க்கு
நாளை வாவென"

(யுத்த காண்டம்)

இராவணனை நோக்கி யெழும் கருணை வாசகமாகக்கனிந்துவருகின்றது. இத்தகைய தியாக வுணர்வினையே 'பேராண்மை' யென்று பெரியோர் கூறுவர். "வானமே யனையதோர் கருணை மாண்பலால், ஊனமே வேறிலான்" என்று கருதத்தக்க பெருமை வாய்ந்த இராமனை,

"ஏனை யுயிராமுதல யாவுமிடைவே வித்(து)
ஊனுகர் அரக்கர் உருமைச் சுடுசினத்தின்
ஆன அனலைக் கடிதவித்தலக ளிப்பான்
வான மழை வந்ததென"த்

தமிழ் முனியாகிய அகத்தியன் கருதுகின்றான். இத்தகைய வீரராமனைக் குறித்து அனுமன்,

"அறந்தலை நிறுத்திவேதம்
அருள்சுரந்தறைந்த நீதித்
திறந்தெரிந்துலகம் பூணச்
செந்நெறி செலுத்தித்தீயோர்
இறந்துக நூறித்தக்கோர்
இடர்துடைத்தேக ஈண்டுப்
பிறந்தனன் தன்பொற்பாதம்
ஏத்துவார் பிறப்பறுப்பான்"

என்று இராவணனை நோக்கிக் கூறுகின்றான். அறம் வளர்த்து இவ்வுலகினைச் செந்நெறி செலுத்தும் தெய்விக சக்தி அவசியமான காலங்களில் தியாக மூர்த்திகளான வீர மக்கள் வாயிலாக ஓங்கிப் பரவுகின்றதென்னும் ஓர் உயர்தர இயற்கை மர்மம் அனுமன் வாக்கில் வெளிப்படுகின்றது. இம்மர்மமே கம்பர் வெளியிடும் அவதார ரகசியமாகும்.

## சிங்காரப் பூங்காவனம்

பால காண்டத்தின் இரண்டு முக்கிய நிகழ்ச்சிகளில் முதல் ஐந்து படலங்களில் குறிக்கப் பெறும் முதற் பெருநிகழ்ச்சியாகிய திருவவதாரம் ஒருவாறு ஆராயப்பட்டது. இனி, திருமணம் என்னும் இரண்டாவது முக்கிய நிகழ்ச்சிக்குப் பத்தாவது மிதிலைக் காட்சிப் படலம் முதல்,இருபதாவது கோலங் காண் படலம் ஈறாக உள்ள பகுதி எவ்வாறு பொருத்தமாக அமைந்துளது என்பது இங்கு ஆராயப்படும்.

* * *

## ஒரு பொது நோக்கு

பண்டை மக்களது சமுதாய உள்ளத்தில் ஊறிக் கிடந்த வீரக்கதை வான்மீகர் ஆச்சிரமத்தில் வடமொழியின் ஆதிகாவியமாக உருமாறிப் பிறந்தது. பின்னை அது செல்வ நெடுமாடங் களிலும் ஏழையர் இல்லங்களிலும் சென்று சேர்ந்து மேனி செழித்து வளர்ந்தது. பொதுமக்கள் உள்ளம் புகுந்து வேரூன்றிய வீரமாக் கதை முகிழ்த்து முறுகி, முடிவில் ஓர் அவதாரமூர்த்தியின் தெய்வ மாக் கதையாக விளைகின்றது. இத்தெய்வமாக் கதையினைத் தழுவி ஒரு தெய்வமாக் காவியம் அமைத்த கம்பர், அக்காவியத்தினைத் தமிழ்ப் பெருமக்கள் அனைவர்க்கும் பொதுவுடைமையாகிய வீரகாவியமாகவும் பேரிதிகாசமாகவும் நிர்மாணஞ்செய்து உரிமையாக்கியுள்ளார் என்று சொல்லவும் வேண்டுமோ?

* * *

கார்லைல் என்னும் பேராசிரியர் கூறும் வண்ணம், வீரனே தெய்வமாகவும் தெய்வமாக் கவியாகவும் காட்சி தருதல் கூடும். வீரன் தெய்வமாக வருவதற்குக் கம்பன் - ராம சான்றாக அமைகின்றானெனின், வீரன் தெய்வக்கவிஞனாக வருவதற்குக் கம்பரே தக்க சான்று தருகின்றாரென்று கூறல் மிகையாகாது. கம்பரது வீரராமன் ஒரு சரித்திர புருஷனல்லன்; இலட்சியபுருஷனாகவே படைக்கப்படுகிறான். கம்பர் தமது பொருவரிய திருவுளத்தே குடிக்கொண்டு போற்றி வளர்த்த உயர்தர இலட்சியங்களும் ஆனந்த கனவுகளும்அவர்தம் காவிய நாயகனைச்சூழ்ந்து சுடர்கின்றன. கம்பரது காவியநாயகனே அவர் தம்தெய்வநாயகனாகவும் திகழ்கின்றான். கம்பராமன் வீரமூர்த்தி, தியாக மூர்த்தி, இலட்சிய மூர்த்தி-ஆதலால் அவதார மூர்த்தி. உச்ந்த நிலையுற்ற வீரத்தின் உச்சிமீது கனியும் தியாக வாழ்க்கையே தெய்வவாழ்க்கை; அத்தகைய வாழ்க்கையினைக் கருவியாகக் கொண்டு விளையாடல் புரிவது, எவர்க்கும் மேல் நின்று இவ்வுலகினைச் செந்நெறி செலுத்தும் அறப்பெருஞ் சக்தியேயாகும். (The power that makes for righteousness.) இஃது இராமாவதாரத்தின் இரகசியம்.

* * *

இத்தகைய அவதாரமூர்த்தியின் இறைமைப்பண்பாகிய தியாக வாழ்க்கையினை முதற்கண் தூண்டிவளர்த்த சக்தி எது? அது தாய்மையே யன்றோ? 'தொட்டில் ஆட்டும் கையே உலகாளும் கை'யென்பது ஓர் ஆங்கில அறிவுரை. அறம் வளர்த்து உலகினைச் செந்நெறி செலுத்திய வீரராமனது தெய்வ வாழ்க்கையினை ஆதியில் உருவாக்கிய கை, குழந்தைப் பருவத்தில் அவனது அருமைச் சிறு தொட்டிலை அசைத்த தாயின் மணிக்கரமேயாகும் என்பது ஊகிக்கப்படும்.

"பிறந்த நாள்தொடங்கியாரும்
துலைபுக்க பெரியோன் பெற்றி
மறந்த நாளுண்டோ?"

என்ற இராமன் வினாவிலே இவ்வூகத்திற்குரியவித்து அடங்கிக் கிடக்கின்றது. புறவொன்றின் பொருட்டாகத் துலைபுக்க பெருந்தகையின் அருளொழுக்கமும் தியாக உணர்வும் குழந்தைகளின் உள்-மனத்திலே ஆழ்ந்து வேரூன்று மாறு, அக்கதையினைத் தாலாட்டாக இசைத்துத் தொட்டிலாட்டுவதும், பண்சுமந்த பாடலாகப் பாடிப் பொழுது போக்குவதும் கோசல நாட்டு வீரத்தாய்மார் வழக்கமாகு மென்று கருதல் கூடும். இராமராஜ்ய வாசிகள், பிறந்த நாள் தொடங்கி, அன்னையர் தீம்பாலோடு, வள்ளன்மை குழைத்தூட்டப்பெற்று வளர்த்தோங்குவாராயினர். எனவே, இராமனது இறைமைக்கு முதற்காரணம் அறிவாற்றல்களில் சிறந்த கோசலையின் தாய்மை யென்று துணிவது இழுக்காகாது. இத்தகைய ஆழ்ந்த அடிப்படைமீது வளர்த்தோங்கும் பெருவாழ்க்கைக்கு வசிட்டர் குரு குலத்து அறிவுரைகளும் பிறவும் துணைக் காரணமாக அமைகின்றன. எனினும் வாழ்க்கைத் துணையாகிய சீதாநாயகியின் காதலே சீதாநாயகனது வீரப்பெருவாழ்வின் 'உள்ளுறை உயி'ராக அமைந்தொளிருமென்பது கம்பர் உட்கிடக்கை.

* * *

## மாதர் குல விளக்கு

அறப்பெருங் கோயிலாகிய கோசல நாட்டுப் பெண்மையின் அறிவுப் பெருமையினை ஒருவாறு உணர்ந்திருக்கின்றோம். அறிவுக்கலைகளிற் போல அன்னார் இன்பக்கலைகளிலும் உடல் வளர்ப்புக் கலையிலும் பயிற்சி பெற்று, உருவ அழகிலும் குண அழகிலும் நிகரற்று விளங்குகின்றார் என்பது இங்குக் கருதத் தக்கது.

"தொழுதகை மடந்தையர்
சுடர்விளக் கெனப்
பழுதறு மேனியைப்
பார்க்கும் ஆசைகொல்
எழுது சித்திரங்களும்
இமைப் பிலாதவே?"

என்பது கம்பர் அழகொழுக எழுதிக் காட்டும் கோசல நாட்டுப் பெண்மையின் சித்திரங்களில் ஒன்றாகும். பெண்கள் சித்திரம் எழுதுகின்றார். அவை உயிரோவியமாக அமைகின்றன. இமைப்பின்மை யொன்றே, இவை சித்திரங்களோ என்ற ஐயம் தருகின்றது. ஆனால் இமைப் பின்மைக்குக் கவி தம்மனோதர்மத்தால் ஒரு காரணம் கற்பிக்கின்றார் தம்மை உருவாக்கும் பெண்களின் சுடர் விளக்கெனச் சுடரும் பழுதிலா அழகு வாய்ந்த பொன்மேனியைப்பார்க்கும் ஆசையினாலோ, இவ்வுயிர்ச்சித்திரங்களும் இமைகொட்டாமலிருக்கின்றன! - என்னும் கற்பனையில், இன்பக்கலையாகிய சித்திரக்கலையில் கோசல நாட்டுப்பெண்களுக்குள்ள தேர்ச்சியும், எழுத வொண்ணாச் சித்திரப் பாவைகளான பெண்மணிகளின் பேரொளி வனப்பும் ஒருங்கே சித்திரிக்கப்பெறுகின்றன. இப்பெண்கள் ரூபசௌந்தரியத்திலும் ஞான சௌந்தரியத்திலும் ஆடவராலும் தொழத்தக்க தன்மை வாய்ந்திருந்தனரென்பது கம்பர் கருத்துப் பொருத்தத்தோடு அமையும் 'தொழுதகை மடந்தையர்' என்ற சொற்றொடரின் புதைபொருளாகும். இம்மடந்தையரே,

"பந்தினை இனையவர் பயிலிடம் மயிலூர்
கந்தனை யனையவர் கலைதெரி கழகம்"

என்ற கவிக்குறிப்பின்படி, கோசலநாட்டை ஒரு பல்கலைக் கழகமாகவும், ஞானப் பூங்கோயிலாகவும் சமைக்கின்றார். இத்தகைய பெருஞ்சக்தி வாய்ந்த ஞானசுந்தரிகளின் குலவிளக்காகச் சீதாநாயகி தோன்றுகின்றாள்.

(தொடரும்)

# எதிரொலி

## குருட்டுத் தேசபக்தர்

இவ்வருஷம் ஜூன்மீ 20௳ யூகோஸ்லாவியா பார்லிமெண்டில் சுட்டுக் கொல்லப்பட்ட ஸ்டெபன் ரேடிச் என்பவரின் வரலாறு "பார்ட் நைட்லி ரிவியூ" என்னும் பத்திரிகையில் வெளியாகியிருக்கிறது. அதன் சாரமாவது:—

குரோஷியா என்னும் தேசம் ஏற்கனவே ஆஸ்திரியா அரசாங்கத்துக் குட்பட்டிருந்து மகாயுத்தத்திற்குப் பின்னர் ஸர்பியாவுடன் சேர்க்கப்பட்டது. இரண்டும் சேர்ந்து இப்போது யூகோ ஸ்லாவியா என்னும் புதிய பெயருடன் விளங்குகின்றன. ஸ்டெபன் ரேடிச், குரோஷியா தேசத்தில் பிறந்த ஒரு குடியானவர். இவருக்கு ஒரு கண் பொட்டை. இவர் பெற்றோர் மிகவும் ஏழைகள். இளமையிலேயே இவர் தேசபக்தி கொண்டு குரோஷியாவின் விடுதலையைப்பற்றிக் கனவு காணத் தொடங்கினர். பாதிக்குருடராதலின் மற்றவர்களின் உதவியைக் கொண்டே அவர் படித்துப் பெரும் கல்விமானாக ஆனார். குரோஷியா ஆஸ்திரியாவின் ஆதிக்கத்தி லிருந்தபோது, அவர் தம் நாட்டின் விடுதலைக்காகவும், தமது குடியான வகுப்பாரின் விடுதலைக்காகவும் நடத்திய போராட்டத்தில் மொத்தம் 30 முறை சிறைபுகுந்தார். மகாயுத்தத்திற்குப் பிறகு குரோஷியாவும் ஸர்பியாவும் சேர்ந்து ஏற்பட்ட யூகோஸ்லாவியாவிலும், குரோஷியாவின் உரிமைகள் புறக்கணிக்கப்படவே, பின்னரும் அவர் விடுதலைப்போராட்டம் நடத்திவந்து கடைசியில் எதிர்க்கட்சிக்காரன் ஒருவனால் யூகோஸ்லாவியா பார்லிமெண்டில் சுட்டுக் கொல்லப்பட்டார். அவர் உயிர் வாழ்ந்தபோது தமது நாட்டாரின் போன்புக்கு உரியவராயிருந்தார். இப்போது ஏராளமான மக்களால் தெய்வமாகப் போற்றப்படுகிறார்.

## தஸரா பண்டிகையில் நல்ல பிரசாரம்

"ஸர்வண்ட் ஆப் இந்தியா" பத்திரிகையின் லாகூர் நிருபர் அப்பத்திரிகைக்கு எழுதுவதாவது:—

பஞ்சாபபில் தஸரா பண்டிகை வருஷந் தோறும் மிகச் சிறப்பாக நடை பெறுவது வழக்கம். இப்பண்டிகையின் போது இராமாயணம், மகாபாரதம் முதலிய வற்றிலிருந்து சிற்சில பகுதிகள் தெருக்களில் நாடகமாக நடிக்கப்படுமாம். இது காறும் வேடிக்கை விநோதமாக மட்டும் நடந்து வந்த இந்த நாடகங்கள் இவ்வருஷத்தில் தேசீயப் பிரசாரத்துக்காகவும் உபயோகிக்கப்பட்டனவாம். அமிருதஸரவில் ஒரு தெருக் கூத்தில் பின்வரும் காட்சி நடந்தது. முதலில் கோயில் குருக்கள் ஒருவர் ஒரு தீண்டாதாரைப் பார்த்துச் சொல்கிறார்:—

"நாங்கள் உங்களைக் கோயில்களுக்குள் விட மாட்டோம். பள்ளிக் கூடங்களில் உங்கள் பிள்ளைகளைச் சேர்த்துக் கொள்ள மாட்டோம். கிணறுகளில் தண்ணீர் மொள்ளவும் அநுமதியோம். உயர்வகுப்பாருக்கும், தாழ்ந்த வகுப்பாருக்கும் வேற்றுமையில்லாமல் போனால் நமது மதமே போய்விடும்."

அதற்குத் தீண்டாதார் பின்வருமாறு பதிலளிக்கிறார்:—

"ஐயரே! சூரியனையும், சந்திரனையும், நட்சத்திரங்களையும் பாரும். அவை இரு பிறப்பாளருக்கும், தீண்டாதாருக்கும் சமமாக ஒளிதரவில்லையா? - ஓ! பகவானே! கிருஷ்ணா! எங்களுக்குத் துணைபுரிவாய். நாங்கள் இப்போது உன் கோயில்களில் விடப்படுகிறோமில்லையே?"

இச்சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ண பகவான் திடீரென்று பிரசன்னமாகிச் சொல்கிறார்:—

"என்னை நேசிப்போர் அனைவரையும் நானும் நேசிக்கிறேன். உயர் சாதியார், கீழ் சாதியார் என்று எனக்கு இல்லை. என் கண் முன் எல்லாரும் சமமே. இந்தியர்கள் இத்தகைய சாதி வேற்றுமைகளை மறந்து விடக் காலம் வந்து விட்டது."

## விந்தையான நிலைமை

"ஜன்மபூமி"யின் குறிப்பு ஒன்று பின்வருமாறு:—

இந்தியாவில் ஒரு விந்தையான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. சைமன் கமிஷனைப் பகிஷ்கரிப்பதாகச் சொல்லும் பத்திரிகைகளின் பக்கங்களில் கமிஷனைப் பற்றிய செய்திகள் நிறைந்து கிடக்கின்றன. கமிஷனின் போக்கு வரவு, அது தனக்குக் கிடைத்த விக்ஞாபனங்களைப் பிரசுரியாமலிருத்தல், அதன் யதேச்சாதிகாரம், அதன் இறுமாப்பு, அதன் முன்பு கொடுக்கப்படும் சாட்சியங்கள், ரசமான விவாதங்கள், அக்கிராசனர் அங்கத்தினரை மட்டந்தட்டுதல் அல்லது கமிஷன் சாட்சிகளை மட்டந்தட்டுதல் ஆகியவைகளைப்பற்றிப் பக்கம் பக்கமாகப் பிரசுரிக்கப்படுகின்றன. இந்தியப்பத்திரிகைகள் இத்துடன்கூட நிற்கவில்லை; கமிஷன் முன்பு கொடுக்கப்படும் சாட்சியங்களை ஜாக்கிரதையாக அலசி ஆராய்கின்றன. டர்னர், கிரிப்பித் இவர்களுடைய சாட்சியங்களின் முரண்பாடுகளை எடுத்துக்காட்டுகின்றன. பம்பாய்த் தலைமை நீதிபதியின் அபிப்பிராயங்களை மறுக்கின்றன. பம்பாய் அரசாங்கம் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவத்தைக் கண்டித்ததை ஆதரவுடன் எடுத்துக் காட்டுகின்றன. அவ்வரசாங்கம் காங்கிரஸ் தீர்மானத்தை எடுத்தாண்டதைக் குறித்துத் திருப்தி தெரிவிக்கின்றன. இவைகளெல்லாம் பகிஷ்காரத்துக்கு நேர் விரோதமல்லவா என்று கேட்கின்றோம். ஸர் ஜான்ஸைமன் வாயிலிருந்து உதிரும் ஒவ்வொருவார்த்தையும் இப்படிக் கவலையுடன் பொறுக்கி உண்டு சீரணிக்கப்பட்டு வந்தால் - நேரு அறிக்கையில் மெஸ்டன் தீர்ப்பைப்பற்றி ஒன்றுங் காணோமென்று அவர் பேச்சிடையே சொன்னதற்கு உடனே பதிலிறுக்கப்பட்டால் - பத்திரிகைகள் மூலம் ஜனங்களுக்கும் கமிஷனுக்கும் நல்ல தொடர்பு ஏற்பட்டுவிடவில்லையா? மனோவாக்குக் காயங்களினால் கமிஷனைப் பகிஷ்கரிக்கும் முறை இதுவா? இவ்விஷயத்தில் தக்க கவனம் செலுத்தப்படவில்லையென்று நம்புகிறோம். இந்தியாவிலுள்ள பத்திரிகைகள் எல்லாம் காங்கிரஸின் ஆதிக்கத்திலிருக்கவில்லை. எனினும், பகிஷ்கார வாதிகளால் நடத்தப்படும் "ஹிந்து" "ஸ்வராஜ்யா" "நியூ இந்தியா" "பார்வர்டு," "நேஷனல் ஹெரால்டு," "பம்பாய் கிரானிகல்," "லீடர்" முதலிய பத்திரிகைகள் இவ்விஷயத்தில் நம்மைப்போல் கருதத் தொடங்குமானால், ஸர் ஜான்ஸைமன்பாடு திண்டாட்டமாகு மென்பதில் சந்தேகமில்லை.

## எழுபதாண்டில் இளமை

"ஊழியன்" பத்திரிகையில் ஸ்ரீ சிதம்பரேசன் என்பார் எழுதியுள்ள கட்டுரையில் பின்வரும் விவரங்கள் காணக்கிடக்கின்றன:—

ஜெர்மனியின் மாஜி கெயிஸர் வில்லியம் தற்போது எழுபதாண்டு நிறைந்தவராயினும் இருபது வயது இளைஞனைப்போன்ற உடல் வலிமையும் ஆற்றலும் பெற்று விளங்குகிறார். இதற்கு முக்கிய காரணம் அவரது தினசரி வாழ்க்கை முறையேயாகும். ஒவ்வொரு நாளும் உடல்பயிற்சி, உளப்பயிற்சி, ஓய்வுநேரம், தொழில் புரிதல் என்பன யாவற்றையும் ஒழுங்குமுறை தவறாது சரிவரச் செய்து வருகின்றார். ஒருபோதும் சோம்பேறித்தனமாக வீண் நேரம் போக்குவது அவரிடத்துக் காண்பதியலாது. கதிரவனின் ஒளியானது நமது காயத்திற் படுங்காலத்து உடலில் நிலைபெற்றுள்ள கெட்ட ஜீவ அணுக்கள் மடிதற்கு ஏதுவாயிருக்கிறதென்றும், சூரியனில் நீராடுதல் உடலிற்குப் பயன் அளிக்கிறதென்றும் கெயிஸர் கண்டுள்ளார். எனவே, வெயிலில் தம்மால் இயன்ற அளவு நடக்கவோ, இருக்கவோ செய்து வருகின்றார். மேலும் சூரியஒளியை இவர் நேராகப் பார்ப்பதுண்டு. கண்கூசாது கதிரவனைப் பார்க்கும் ஆற்றலைத் தம் முன்னோராகிய மகா பிரடரிக் அரசரிடமிருந்து அடைந்துள்ளார்.

எளிய வாழ்க்கையும் எளிய உணவையுமே கெய்சர் எக்காலத்தும் விரும்பி வந்திருக்கின்றார். பெரிய விருந்துச் சாப்பாடுகளில் கலந்துகொள்ள நேரின், கையில் கிடைத்தவை யாவற்றையும் உள்ளே செலுத்திவிட வேண்டும் என்ற எண்ணம் இவர் ஒருபோதும் கொண்டதே இல்லை. பிறர் தம்பேரில் வருத்த மடையாதிருக்கும் பொருட்டுச்சிறிது உட்கொள்ளுவார். அமெரிக்க நாட்டிற்கு அவர் செல்லாதிருந்ததின் முதற்காரணம் அமெரிக்க விருந்தை அவர் வெறுத்ததேயாகும். அமெரிக்கர் மிகுந்த பணச்செலவுடன் உயரிய முறையில் உணவு அளித்து வருவதால் அத்தகைய உணவு தமது உடல் நலத்தைக் கெடுத்துவிடும் என்ற அச்சம் மனதில் குடிகொண்டிருந்ததால், அமெரிக்கா செல்லத் தாம் விரும்பவில்லை என ஓரிடத்து அவர் கூறியுள்ளார்.

அவரது காலை உணவில் சிறப்பாகக் கனி வகைகளையே உட்கொண்டு வந்தார். ஊன் உணவை விடுத்து அதற்குப் பதிலாகக் கனிகளையே சாப்பிடுவார். மாலையில் வீட்டில் இருப்பதாயின் உணவருந்தும் வழக்கமே கிடையாது. பழத்தின் சாறுதான் சாதாரணமாக மாலையில் அவர் அருந்தும் உணவு. விஸ்கி முதலிய போதைப் பொருட்களை அவர் சாப்பிடுவதே யில்லையாம். விருந்துகளுக்குச் சென்றால், தமக்கு விருந்து அளிப்பவரின் மகிழ்ச்சிக்காக எல்லா உணவு வகைகளையும் சிறிது சிறிது தொட்டுக் கொள்ளுவாராம். உணவில் முக்கியமாக அவர் உட்கொண்டு வந்தது மாக்கறிகளும், ஆரஞ்சு, ஆப்பிள் போன்ற கனிவகைகளுமேயாகும்.

கோடைகாலத்தில் அவர் தமது இரு தோழர்களோடும், தோட்டக் காரனோடும் செடிகளுக்கும் பயிர்களுக்கும் தண்ணீர் இறைப்பார். சிலபோது எழுநூறு முதல் எண்ணூறு தொட்டிகள் கெயிசர் வில்லியம் இறைத்திருப்பதாகத் தெரிய வருகிறது. "ஒவ்வொரு மனிதருக்கும் ஒரு தோட்டம் இருத்தல் அவசியமென நான் எண்ணுகிறேன். தோட்டவேலையே உடற்பயிற்சியில் மிகவும் விரும்பத்தக்க, பயன் மிகுந்த முறை என்பது என் கருத்து" என அவர் ஒரு சமயம் கூறியுள்ளார்.



# உதிர்ந்த மலர்கள்

டர்ஹாம் பிஷப்:— நாம் வசிக்கும் இந்த யுகத்தை எல்லா மறித்த குழந்தைகளின் யுகம் என்று சொல்லலாம்.

* * *

எம். டெல்டில்:— இக்காலத்தில் அறிஞர்களும், கவிகளும், பட்டினி போடப்படுகிறார்கள். இன்னும் பத்து வருஷத்திற்குப் பிறகு சமூகம் அவர்களைச் சுட்டுக்கொன்றே விடலாம்.

* * *

ஸையத் குலாஷிம் கான் (ஆப்கானியத் தூதர்):—எங்கள் அரசர் ஆப்கானிஸ் தானத்தில் எல்லாமனிதர்களையும் சரிநிகர் சமானமாக்கிவிட்டார். எல்லாவகைப் பட்டங்களையும், சிறப்புக்களையும், இராஜாங்க உடைகளையும் ஒழித்து விட்டார். ஆப்கன் குடிகள் அனைவரும் இப்போது ஒருபெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போல் வாழ்கிறார்கள்.

* * *

தீனபந்து ஆண்ட்ரூஸ்:— ஒன்று நான் தீர்மானமாய்ச்சொல்லக்கூடும். இந்தியாவின் பாமர ஜனங்கள் சமாதானம், அன்பு, தயாளம், அஹிம்சை என்னும் குணங்களைக் கைக்கொண்டு ஒழுகி வந்திருப்பதைப்போல் உலகில் வேறெங்கும், வேறெந்த ஜனங்களும், எக்காலத்திலும் அக்குணங்களைக் கடைப்பிடித்து நடந்தது கிடையாது.

* * *

மகாத்மா காந்தி:—நான் இன்னமும் இந்தியாவிற்குத் தலைமை வகித்தாடத்தக்கூடும். ஆனால் தேசத்தார் அனைவரும் ஜாதிமத வேற்றுமையின்றி மனப்பூர்வமாக என்னை அழைத்தால்தான் அவ்வேலையில் தலைப்படுவேன். பாமர ஜனங்கள் அஹிம்சையின் சக்தியை உணரவேண்டும். எனக்கு அவர்களிடம் உள்ள செல்வாக்கைப்பற்றி நான் நிச்சயம் பெறவேண்டும். அதுவரையில் நான் தலைமை வகிக்கமுடியாது.

* * *

மேற்படியார்:—அப்படிப்பட்ட நிலைமை சமீபத்தில் நேருமென்று தோன்றவில்லை. என் ஆயுட்காலத்தில் அந்நிலைமை ஏற்படாமலேயே போகலாம். இந்தியாவை நடத்தக் கூடிய ஒருவர் தற்போது இருக்கத்தான் வேண்டும். அவரை நான் அறியேன். ஆனால் அப்படிப்பட்ட ஒருவருமே இல்லாவிடில் நான் உண்மையிலேயே வெட்கமடைவேன்.

* * *

மேற்படியார்:— இந்தியாவிற்குத் தலைவராக வருவோர்க்கு முகவசியம், வாக்கு வன்மை, பணம் இவை அவசியம். ஆனால் வாக்கு வன்மை மதிப்பிழந்து வருகிறது. இம்மூன்று மிருந்தாலும் உண்மை உள்ளம் இல்லாவிடில் எவரும் இந்தியாவிற்குத் தலைமை வகிக்கமுடியாது.

* * *

ஸ்ரீமான்:— தயவு செய்து தாங்கள் போகும் போது இந்தக் கடிதத்தைத் தபால் பெட்டியில் போட்டு விடுகிறீர்களா? அவசரக் கடிதம். தவறாமல் போட்டுவிட வேண்டும்.

நண்பர்:— அவசியம் போட்டுவிடுகிறேன். இருந்தாலும் முன் ஜாக்கிரதையாக இரண்டு தேதி தள்ளிப் போட்டால் நலமல்லவா? இன்று தேதி பத்து; அதை 12 ஆக மாற்றி விடுங்களேன்!

# ஊர்வம்பு

"தமிழ்த்தேனீ" திரட்டியது

"ஸ்ரீமான் எஸ். ஆர். தாஸின் மரணத்தைக் குறித்து என் துக்கத்தை வெளியிடச் சந்தர்ப்பம் கிடைத்திருப்பதுபற்றி மகிழ்ச்சி யடைகிறேன்."

—ஸர் ஜான் ஸைமன்.

* * *

பிந்தைய மகிழ்ச்சியில் முந்தைய துக்கம் மறைந்து ஆறுதல் விளைந்திருக்குமென ஆவலுடன் நம்புகிறோம்.

* * *

பஞ்சாப் போலீஸ் இலாகா தலைவர் மிஸ்டர் ஸ்டெட் சைமன் கமிஷன் முன்பு சொன்னதாவது:— "ஒவ்வொரு கான்ஸ்டேபிளுக்கும், அவன் தன்னையே சர்க்கார் என எண்ணிக்கொள்ளக் கூடாதென்றும், அவன் ஜனங்களின் ஊழியனே என்றும் நாங்கள் வற்புறுத்தி போதித்து வருகிறோம்."

* * *

வெறும் வாய்ப்போதனையால் மட்டுமன்றி உதாரண பாடம் மூலமாகவும் இதை உணர்த்தி வருவதாகவே தெரிகிறது. லாலா லஜபதிராய், டாக்டர் சத்தியபால், ஹன்ஸ்ராஜ் முதலியோர் சாட்சி.

* * *

லண்டன் சாக்கடைகளின் அமைப்பு முறையைக் காட்டும் சினிமா காட்சிப்படம் ஒன்று தயாரிக்கப்பட்டிருக்கிறதாம்.

* * *

மேயோ அம்மையாரின் தனி உரிமைக்கு நேரிட்டிருக்கும் இந்த விபத்தைக் குறித்து நாம் பெரிதும் வருந்துகிறோம்.

* * *

வெஸ்ட் மின்ஸ்டர் போலீஸ் கோர்ட்டில் விசாரணை ஒன்று நடந்து கொண்டிருந்தபோது ஒருவன் தன் மனைவியை முகத்தில் அடித்தானாம்.

* * *

இந்தியாவில் இத்தகைய அசந்தர்ப்பங்கள் எல்லாம் நடப்பதில்லை. இங்கே கணவர்கள், முன்யோசனை யுள்ளவர்கள். வீட்டுக்குள்ளேதான் மனைவியை அடிப்பார்கள்.

* * *

மேலும் கோர்ட்டில் பகிரங்கமாக மனைவியை அடிப்பதென்றால், ஆயிரம், பதினாயிரம் செலவழித்து வீடுகள் எதற்காகக் கட்டியிருப்பது?

* * *

சீமையில் காசநோய்க்காரர்களின் சங்கம் ஒன்று ஏற்பட்டிருக்கிறதாம். ஆரம்பப்பிரசங்கிகள் இச்சங்கத்தில் உபந்நியாசம் செய்து பயிற்சிபெறலாமென நம்புகிறோம். இதன் மூலம் அவர்கள் சபையில் இடையில் ஏற்படும் சத்தங்களைப் பொருட்படுத்தாமல் பிரசங்கமாரிபொழியும் ஆற்றல் பெறக்கூடும்.

* * *

கூட்டத்தில் யாரேனும் ஒருவர் சிறிது தொண்டையைக் கனைத்தாலும், பேச்சை நிறுத்திவிட்டு விழிக்கும் பிரசங்கிகள் சிலரை நாம் பார்த்துள்ளோமாதலின் அவர்கள் மீதுள்ள இரக்கத்தினாலேயே இதைச்சொல்ல வந்தோம்.

* * *

"வேலைசெய்யுங்கள்! வேலைதான் செல்வமென்னும் பொக்கிஷத்தின் சாவி" என்று கானடா நாட்டுக் கோடீசுவரரான மிஸ்டர் ராபர்ட் சொல்கிறார்.

* * *

உண்மை தான். ஒருவன் மேற்படி சாவியைக் கொண்டு மிகவும் கஷ்டப்பட்டுப் பொக்கிஷத்தைத் திறந்தால், பக்கத்தில் சும்மா பார்த்துக் கொண் டிருப்பவன் உள்ளே நுழைந்து கொண்டுபோய் விடுகிறானே? இதற்கென்ன செய்வது?

* * *

பிரிட்டிஷ் பொக்கிஷ மந்திரியான மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சில் சமீபத்தில் செங்கல் அறுக்கும் வேலை செய்தாராம். அவர் செங்கல் அறுக்கும்போது பிடித்த படங்களும் பிரிட்டிஷ் பத்திரிகைகளில் வெளியாகி யிருக்கின்றன.

* * *

இதன் பொருட்டு மிஸ்டர் சர்ச்சிலுக்கு நன்றி பாராட்டுவதற்காக, செங்கல் அறுப்போர் பலர் பொக்கிஷ மந்திரி வேலை பார்க்கச் சித்தமாயிருக்கின்றனர்.

* * *

லார்ட் பர்க்கென்ஹெட் முடிவாக அரசியலை விட்டு விலகி விட்டாராயினும், இன்னும் அரசியல் நடந்து கொண்டுதானிருக்கிறதென்று நேயர்களுக்கு ஆறுதல் கூற விரும்புகிறோம்.

* * *

அமெரிக்காவில் பதினெட்டு வயது இளைஞர் ஒருவர் எழுதிய ஒரு நாவலை அமெரிக்கப் புத்தகசாலைகள் பகிஷ்காரஞ் செய்யத் தீர்மானித்திருக்கின்றனவாம்.

இந்திய நூலாசிரியர் பலர் மேற்படி இளைஞருடன் கடிதப் போக்கு வரவு தொடங்கியிருப்பதாகக் கேள்வி. புத்தகசாலைகள் பகிஷ்காரஞ் செய்யும்படியாக அப்புத்தகத்தில் இருந்த விஷயம் என்னவென அறிந்து கொள்ள அவர்கள் ஆவலாயிருக்கிறார்களாம். அந்த விஷயத்தைத் தங்கள் நூலிலும் புகுத்திவிட்டால் இந்தியாவிலுள்ள வாசக சாலைகள் யாசகங் கேளாதிருக்குமல்லவா வென்பது அவர்களுடைய ஆசை யென்று தெரிகிறது.

* * *

ஸர் தேஜ்பகதூர் சப்ரூவை ஸி. ஐ. டி. சந்தேகநபர்களின் ஜாபிதாவில் சேர்த்திருப்பதுபற்றிப் "பயனியர்" முறையிடுகின்றது.

* * *

ஸி. ஐ. டி. இலாகாவுக்கு இந்தியாவில் "சாதி இரண்டொழிய வேறில்லை" என்பதை அப்பத்திரிகை அறியாது போலும்! அதிகாரவர்க்கத்தைச் சேர்ந்தவர், சேராதவர் என்ற இரண்டு வகுப்புகள்தான். அதற்கு "மாஜி" என்று ஒரு வகுப்பில்லை.

* * *

"போலீசார் கிளர்ச்சிக்காரர் மீது தடிகளைப் பிரயோகித்தனர். லாலாலஜபதிராயும், இன்னும் ஒருவர் இருவரும் தடியினால் அடிக்கப்பட்டதாக நம்பப்படுகிறது. அவர்கள் காயமடைந்தனர் என்று நம்பப்படவில்லை" என்று பஞ்சாப் அரசாங்கத்தின் உத்தியோக முறை அறிக்கை கூறுகிறது.

* * *

இவ்வறிக்கையைஎழுதியவர்மீது "போலீஸ் தடிகள்" அவதூறு வழக்குத்தொடர உத்தேசித்திருப்பதாய் நமக்கு நம்பத்தக்க இடத்திலிருந்து மானதச் செய்தி ஒன்று கிடைத்திருக்கிறது.

* * *

சென்னையில் சுல்தான் கான் என்பவர் மற்றொருவருடைய சட்டைப் பையிலிருந்து 23 ரூபா அடங்கிய பணப் பையைத் திருடியதற்காக ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார்.

* * *

வெளியூரில் ஒரு தேவர் குடித்து விட்டுக் கலகம் செய்ததுடன், அம்மயக்கத்தில் போலீஸ் காரரைச் செருப்பாலடித்ததற்காக ஒரு மாதம் சிறைத்தண்டனை அடைந்தார்.

* * *

இவ்விருவர் விஷயத்திலும் விதிக்கப்பட்ட தண்டனைகளின் நியாயத்தை அனைவரும் ஒப்புக் கொள்வார் களென்பதில் சந்தேகமில்லை. கொஞ்ச நஞ்சம் சந்தேக முள்ளவர்களுக்கு, பின்னவரைத் தண்டித்த மாஜிஸ்ட்ரேட் "அவர் குடி மயக்கத்தில் தாம் செய்வதின்ன தென்றறியாத நிலையில் செய்தபடியால் குறைந்த தண்டனை விதிப்பதாக"க் கூறியுள்ளதை எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

* * *

அமெரிக்கப் பெண்மணி ஒருவர் தாம் விவாக ரத்து செய்து கொண்ட 35 நிமிஷத்திற்கெல்லாம் மறுமணம் செய்து கொண்டாராம்.

* * *

இடையில் இவ்வளவு தாமதம் ஏற்பட்டதின் காரணத்தை நாம் ஒருவாறு ஊகித்தறியலாம். முதலில் நிகழ்ந்த சந்தோஷ சம்பவத்தைக் கொண்டாடும் பொருட்டு விருந்து நடத்தியதில் அந்த 35 நிமிஷம் செலவழிந்திருக்க வேண்டும்.

* * *

அவலட்சணமான முகங்களையும் அழகிய முகங்களைப் போல் காட்டக்கூடிய கண்ணாடி யொன்றை ஒரு பிரஞ்சுக்காரர் கண்டுபிடித்திருக்கிறாராம்.

நமது நாடகங்களில் நடிக்கும் நடிகர் பலர் இத்தகைய கண்ணாடிகளிலேதான் தங்கள் முகங்களைப் பார்த்தவர்களாயிருக்க வேண்டுமென்று நாடகப் பிரிய நண்பர் ஒருவர் அவதூறு கூறுகிறார்.

* * *

உபாத்தியாயர் எப்போதும் தன் வலது சட்டைப்பையில் கடிகாரம் வைத்திருப்பது வழக்கம். ஒரு நாள் அவர் வகுப்பில் வந்து உட்கார்ந்ததும் சட்டைப் பையைத் தடவிப் பார்க்க அதில் கடிகாரம் காணுமலிருந்தது. ஒரு பையனை அழைத்துத் தம்வீட்டுக்குப் போய்க் கடிகாரத்தை எடுத்துக்கொண்டு வரும்படி சொன்னார். பையன் வாயிற்படியண்டை போனதும் உபாத்தியாயர் இடது சட்டைப்பையில் கைவிட அதில் கடிகாரம் இருந்து அகப்பட்டது. உடனே அவர் அதை எடுத்துப் பார்த்துவிட்டுச் சொன்னதாவது:—"கோபால்! இப்போது மணி சரியாக 10-30; 10-45க்குள் நீ திரும்பிவிட வேண்டும்!"

# மணித்திரள்

உலகிலுள்ள கப்பல்களில் பாதி கிரேட் பிரிட்டனுக்குச் சொந்தமாம்.

* * *

உலகில் தற்போது மூன்று கோடி மோட்டார் வண்டிகள் இருக்கின்றன.

* * *

உலகில் பெரிய பாலைவனமான ஸஹாரா பாலை வனத்தில் சிலவிடங்களில் 30 அடி ஆழம் மணல் இருக்கிறதாம்.

* * *

பத்து மணிநேரம் உடல் உழைப்பினால் ஏற்படும் களைப்பு நான்குமணி நேரம் மூளை உழைப்பினால் உண்டாகுமாம்.

* * *

ஜப்பானில் உயிருள்ள எரிமலைகள் மொத்தம் 51 இருக்கின்றன. வேறெந்த நாட்டிலும் இவ்வளவு எரிமலைகள் இல்லை.

* * *

ஆகாய விமானங்களில் பிரயாணம் செய்வோருக்கு வேண்டிய தண்ணீரைப் பனிக்கட்டியாக உறையவைத்துக் கொண்டு போகிறார்களாம்.

* * *

உலகில் கயிற்றினாலான மிக நீளமான சாலை அர்ஜண்டைனில் இருக்கிறது. அதன் மொத்த நீளம் 217 மைல். சில விடங்களில் தரையிலிருந்து 12,500 அடி உயரத்தில் அது அமைந்துள்ளதாம்.

* * *

அமெரிக்காவில் உள்ள ஒரு வெந்நீர் ஊற்றிலிருந்து 38 வினாடிக் கொருமுறை தவறாமல் வெந்நீர் குப் குப் என்று கிளம்பி விழுகிறதாம். இதன் மூலம் ஒரு கடிகாரத்தை இயக்கி அவ்வூர் வாசிகள் காலம் அறிந்து கொள்கிறார்களாம்.

* * *

மிஸ்டர் எட்கார் வாலேஸ் என்னும் பெயர் பெற்ற ஆங்கிலக் கதாசிரியர் தமது சிறு கதைகளைக் கிராமபோன் தட்டில் பிடிக்கச் செய்து வருகிறாராம். இனி மேல் படிக்க விருப்பமில்லாதவர்கள் கிராமபோனை முடுக்கி விட்டுக் கதை கேட்கலாம்.

* * *

லிவர்பூல் குழந்தைகளின வைத்திய சாலையில், ரேடியோ கருவிகள் அமைக்கப்பட்ட தலையணைகள் உபயோகத்திலிருக்கின்றனவாம். குழந்தைகள் அவற்றில் தலைவைத்துப் படுத்துக் கொண்டால் ரேடியோ மூலம் வரும் சங்கீதம் கேட்கலாமாம். குழந்தைகளை அலையாமல் படுத்திருக்கச் செய்வதற்கு இம்முறை கையாளப் படுகிறது.

* * *

மின் மினிப் பூச்சிகளின் வாலில் உள்ள ஒளி, என்ன தத்துவத்தின் பேரில் சாதாரண விளக்குகளில் ஒளி உண்டாகிறதோ, அதே தத்துவத்தின்படி ஏற்பட்டதாம். அதாவது, எரியக் கூடிய ஒரு பொருளும் பிராணவாயுவும் சேர்வதின் பயனாக அவ்வொளி உண்டாகிறதாம். ஆனால் விளக்கில் இல்லாத ஒருவிநோதம் அதில் உண்டு. அதாவது அவ்வொளியில்வெப்பமே கிடையாது. எனவே "குளிர்ந்த ஒளி" என்று அதைச் சொல்லலாம்.

* * *

பல சாதியார் பலவிதப் பிரமாணம் செய்யும் முறைகளை அனுஷ்டிக்கிறார்கள். சீனர்களுக்குள் உள்ள ஒரு விநோத முறையாதெனில் பிரமாணம் செய்யுமுன் ஒரு விளக்கை ஊதி அணைத்துவிட வேண்டுமாம். மற்றொரு வழக்கத்தின்படி, பிரமாணம் செய்வோன் ஒருபீங்கான் தட்டை முழங்காலால் அமுக்கி உடைத்து விட்டு "நான் பொய் சொன்னால் இத்தத்தட்டு உடைந்ததுபோல் என் ஆன்மா உடைந்து போகுமாக" என்று சொல்லவேண்டுமாம்.

* * *

முற்காலத்தில் இந்திர ஜித்தன் முதலிய அரக்கர்கள் மாயவித்தையினால் தாங்கள் மறைந்து நின்று கொண்டு எதிரிகளைத் தாக்கியதாகப் புராண இதிகாசங்களில் படித்துள்ளோம். இத்தகைய மாயப்போர் முறைகள் இக்காலத்திலும் இனிவரும் யுத்தங்களில் கையாளப்படலாமென்று தெரிகிறது. யுத்தகாலங்களில், நகரங்களும் பட்டணங்களும் ஆகாய விமானங்களால் தாக்குறாவண்ணம் அவற்றை அடியோடு மறைந்து போகும்படி செய்யும் முறையை ஜெர்மானிய நிபுணர் டாக்டர் ரெட்டிமான் என்பவர் கண்டு பிடித்திருக்கிறார். ஒரு மின்சாரப்பொத்தானை அமுக்கினால்போதும். உடனே வெண்மையானபுகை கிளம்பிச் சில நிமிஷநேரத்தில் நகரம் இருக்குமிடம் தெரியாவண்ணம் மூடி மறைத்துவிடுமாம். தரையில் ஆங்காங்குப்புதைக்கப்பட்டிருக்கும் இரகசிய இரசாயனப் பொருள்களடங்கிய பாத்திரங்களிலிருந்து வேண்டும்போது மேற்படி புகையைக் கிளப்பி விடலாமாம்.

ஏன்கடன் பணிசெய்து கிடப்பதே

எவ்வுயிர்க்கும் அன்பாயிரு

நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1928ஹு நவம்பர்மீ 7உ

## லஜபதியின் வீரம்

பாஞ்சால சிங்கம் - லஜபதிராயை லாகூர் போலீஸார் வரம்பு மீறித்தாக்கி யதைக் குறித்துச் சென்றவாரம் எழுதி னோம். அதை யொட்டிய முழுச் செய்தி பின்னே கிடைத்தது. அச்செய்திக்கண் லஜபதிராயின் "அடியே" நடுமணியா யிலங்குகிறது. லஜபதிராய் நாட்டின் பொருட்டு அடி பட்டதன் பின்னும் சைமன் குழுவுடன் அமர்ந்திருக்கும் இந்தியர் நிலை குறித்துப் பெரிதும் இரங்குகிறோம். லாலா அவர்களை வரம்பு மீறிப் போலீஸார் தாக்கியதைப் பற்றி அதிகாரிகள் மன்னிப்புக் கேட்க முந்துகிறார்களில்லை. ஒரு பெருந் தேசபக்தரைக் காரணமின்றி வரம்பு கடந்து போலீஸார் அடித்தது நியாய மென்று ஸர் சங்கரன்நாயர் கருதுகிறாரா என்று கேட்கிறோம். சைமன் குழுவைப் பற்றிய கவலை நமக்கில்லை. அதிகாரவர்க் கத்தைப்பற்றிய கவலையும் நமக்கில்லை. சைமன் குழுவுடன் வீற்றிருக்கும் இந் திய சகோதரர்களைப்பற்றியே நாம் கவல்கிறோம்.

லாலா லஜபதிராயைப் போலீஸார் தாக்கியபோது, ஆண்டுப் பொங்கிய மனிதக் கடலை அடக்க எவரால் இய லும்? அப்பொங்கலைத் தணித்த லஜ பதியின் பெருமையை என்னென்று புகழ்வேம்? லஜபதியின் கட்டளைக் கிணங்கி நடந்த மக்களையும் நாம் போற்றுகிறோம். பெருங் கலவரை அடி த்தாதல் பொது மக்களின் சீற்றத்தைக் கிளப்பலாமென்று லாகூர் போலீஸார் கருதினரோ என்னவோ தெரியவில்லை.

அன்று கூடிய பொதுக் கூட்டத்தில் பஞ்சால சிங்கம் கர்ச்சித்திருக்கிறது. அக் கர்ச்சனையை மற்றோரிடத்திற் காண்க.

## வெளவால்

முன்னர் ஒரு முறை காங்கரஸ் வெளவாலாயிற்று.பின்னை ஒருவாறுகாங் கரஸ் அந்நிலையை நீக்கிக் கொண்டது. காங்கரஸ் ஒத்துழையாமையையும்சட்ட சபை நுழைவையுங் கொண்டு இடர்ப் பட்டுப் பின்னே ஒத்துழையாமையை நெகிழ விடுத்தது நேயர்கட்குத் தெரி யும். மீண்டுங் காங்கரஸ் கல்கத்தாவில் வெளவாலாக டெல்லியில் அது கருக் கொண்டுவிட்டது.

டெல்லியில் சென்றவாரங் கூடிய அகில இந்திய காங்கரஸ் கூட்டம் சென்னைக் காங்கரஸ் தீர்மானத்தைத் தலையிலும், சர்வகட்சி மகாநாட்டின் தீர் மானத்தை வாலிலுந்தாங்கிக் கல்கத்தா வில் கூடப் போகும் காங்கரஸை வெள வாலாக்க அடிகோலியிருக்கிறது. சின்னு ளாகக் காங்கரஸுக்குள் இரண்டு கட்சிக ளிருப்பதாகப் பாவித்துக்கொண்டு சில விடங்களில் சிலர்பெருங்கிளர்ச்சிசெய்து வருகிறார். அக்கிளர்ச்சியின் பயனுகக் காங்கரஸுக்குத் தற்போதுள்ள சிறு செல்வாக்குங் குன்றிப்போகும் ஒரு நிலை நேர்ந்திருப்பது குறித்துப் பெரி தும் வருந்துகிறோம்.

சென்னைக் காங்கரஸ் பிரிட்டிஷ் பொருள்களுக்கு இடந்தந்து, சுயேச் சைத் தீர்மானம் நிறைவேற்றி யதைப்பற்றி நாம் அப்பொழுது எழு திய கட்டுரைகளை நேயர்கள் மறந் திருக்க மாட்டார்களென்று நம்பு கிறோம். இந்தியாவின் இலட்சியம் சுயேச்சை என்பது சென்னைக் காங்கர ஸின் சுயேச்சைத், தீர்மானத்தின் பொருளாம். இந்தியாவின் இலட்சியம் சுயேச்சை என்பதை மறுப்பார் ஒரு வருமில்லை. மிகத்தாழ்ந்த மிதவாதி கள்கூட இதை ஏற்றுக் கொள்வார்கள். இந்தியாவின் இலட்சியத்தைப் பற்றி எவரிடத்திலுங் கருத்து வேற்றுமை யிருப்பதாகத் தெரியவில்லை. அந்த இலட்சியத்தை நிறைவேற்ற எம் முறை கொள்வதென்பதே இப் பொழுது பிறந்துள்ள கேள்வி.

அம்முறை கோலுதற் கெனச் சர்வ கட்சி மகாநாடு கூட்டப்பட வேண்டு மென்று "சுயேச்சை"க் காங்கரஸே வழி காட்டிற்று. இலட்சுமண புரியில் சர்வ கட்சி மகாநாடு கூடி ஒரு திட்டத் தை நாட்டார் முன்னிலையில் கிளத்தி யிருக்கிறது. அது காங்கரஸ் சுயேச் சைத் தீர்மானத்துக்கு முரண் பாடு என்று ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்காருள் ளிட்ட ஒரு சிலர் கிளர்ச்சி செய்கிறார்.

காங்கரஸ் தீர்மானம், இலட்சியமா அல்லது தற்போதைய நடை முறைக் குரியதா என்பதைச் செவ்வனே விளக் காமலே நண்பர்கள் கிளர்ச்சி செய்கிறார் கள். இலட்சிய மெனில் நேருதிட்டத் தைக்காங்கரஸ் ஆதரிப்பதில்தவறில்லை. தற்போதைய நடை முறை யெனில் காங்கரஸ் பெயரால் எவருஞ் சட்ட சபையில் வீற்றிருத்தல் கூடாது. இதை லாலாலஜபதிராய் செவ்வனே விளக்கிக் காட்டி வருகிறார். சுயேச்சைப் பேச்சுப் பேசுவோர் இராஜ விசுவாசப் பிர மாணஞ் செய்வது நீதியா என்று கேட் கிறோம். இத்தகைச் சுயேச்சைக்கு ஏதாயினும் பொருளுண்டா என்றும் வினவுகிறோம். காங்கரஸ் தீர்மானத் தை இலட்சியமாக் கொண்டு நேரு திட் டத்தை ஆதரிப்பதற்காதல் பொரு ளுண்டு.

அகில இந்திய காங்கரஸ் கண்ட சமாதான முறை கல்கத்தா காங்கரஸை வெளவாலாக்கும் என்பதில் ஐயமில்லை. அகில இந்திய காங்கரஸ் நிறைவேற்றி யுள்ள தீர்மானத்தைப்பற்றிய பொரு ளுக்கு இனிப் புதுப்புது வியாக்கி யானங்கள் வெளிவரும். அத்தீர்மானம், காங்கரஸின்இலட்சியம் சுயேச்சையென் றும், நேரு திட்டத்தைப் பொதுவாக ஆதரிப்பதாகவுங் கூறுகிறது. ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார், காங்கரஸ், சுயேச் சையையே ஆதரித்து நிற்கிறதென் றும், நேரு திட்டத்திலுள்ள குடி யேற்ற நாட்டுரிமை என்னும் பகுதிநீங்க லாக பிறவற்றை அஃது ஏற்றுக்கொள் கிறதென்றும் பத்திரிகை நிருபரிடஞ் சொல்லியிருக்கிறாரென அறிகிறோம். அகில இந்திய காங்கரஸ் நிறைவேற்றி யுள்ள தீர்மானத்தை உற்று நோக்கி னால் ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ஐயங்கார் கூறும் பொருளுக்கு அஃது இடந்தரு கிறதென்பது தெள்ளிதில் விளங்கும். சுயேச்சையை இலட்சியமாக் கொண்டு நேருதிட்டத்தைக் காங்கரஸ் ஆதரிக்கிற தென்று வேறு சிலர் பொருள் கூறு கிறார். இரண்டுக்கும் இடந்தரு முறை யில் அகில இந்திய காங்கரஸ் கூட்டம் தீர்மானத்தை நிறைவேற்றியிருக்கிறது. இத்தீர்மானம் கல்கத்தா காங்கரஸுக் குப் பேர் இடர் விளைக்கும் என்பதில் ஐயமில்லை.

அகில இந்திய காங்கரஸ் நடை முறையில் பண்டித நேரு பேசியபோது காங்கரஸினும் சர்வகட்சி மகாநாடே சிறந்ததென்றும், மற்றக் கட்சி அமைப் புக்களைப்போலக் காங்கரஸும் ஒரு கட்சி அமைப்பென்றும், சர்வகட்சி மகா நாட்டுத் தீர்மானத்தை அகில இந்திய காங்கரஸ் கூட்டங் கவிழ்க்கு மேல், தாங் கல்கத்தா காங்கரஸ் தலைமைப் பத வியை நீத்துச் சர்வ கட்சி மகாநாட்டின் தீர்மானத்தின் வழி நின்று கடனாற்றப் போவதாகவுங்கூட்டத்திலிருந்தவர்களை மருட்டினர். அம்மருட்டலுக்கு அஞ் சிச் சுயேச்சை வாதிகள் நேரு திட்டத் துக்கும் ஆதரவு கூறிவிட்டார்கள். இவ் வெளவால்களால் காங்கரஸுக்கும் தேசத்துக்கும் பெருந் தீங்குண்டு என்று சொல்ல வேண்டுவதில்லை.

அகில இந்திய காங்கரஸ் கூட்டம் ஏதாயினும் ஒரு வழி காட்டியிருத்தல் வேண்டும். அஃது இரண்டையும்பற்றி நிற்க முன் வந்திருப்பது நாட்டை நல் வழியில் நடாத்துவதாகாது. காங்கரஸ் கூட்டம் "தற்போதே பிரிட்டிஷ்தொடர் பை யறுத்துக் கொள்வதென்னும் பொ ருள் அளிக்கத்தக்க சுயேச்சையேவேண் டும்" என்று, நேரு திட்டத்தை நிரா கரித் திருத்தல்வேண்டும் அல்லது "சுயேச்சை இலட்சியமே யன்றித் தற் போதைய நடை முறைக்குரிய தன்று" என்று நேரு திட்டத்தை வெளிப் படையாக முற்றும் ஆதரித்திருத்தல் வேண்டும். இவ்விரண்டில் ஒன்றைச் செய்யாது அகில இந்தியக் காங்கரஸ் கூட்டம் வெளவால் பாடம் படித்தது விரும்பத்தக்கதன்று.

காங்கரஸ் தேச மகாசபையா யிருத் தல் வேண்டும் அல்லது ஓர் அதி தீவிர கட்சியமைப்பா யிருத்தல் வேண்டும். தற்போதைய காங்கரஸ் இரண்டு மற்ற ஒன்றாயிருக்கிறது.

காங்கிரஸில் சுயேச்சைக் கூச்சலிடு வோர் சுயேச்சைக்குரிய வேலை ஏதாயி னுஞ் செய்கிறாரா? வேலையிலிறங்கினுல் நீதிமன்றங்களையும், சட்டசபைகளையும், அரசாங்க மாளிகை விருந்துகளையும் விட்டொழித்தல் வேண்டு மன்றோ? அவைகளைச் சுயேச்சை நண்பர்கள் விடுவார்களா?

சுயேச்சை பேசும் நண்பர்கள் ஒத் துழையாமையை ஏன் உயிர்ப்பித்த லாகாது? கல்கத்தா காங்கரஸில் சுயேச் சை வாதிகள் எம் முறை கோலப் போகிறார்களோ தெரியவில்லை. எவ் வெவ்வழியில் சுற்றிச் சுற்றி வந்தாலும், "சுயராஜ்யம் ஒத்துழையாமையில்" என் னுமிடத்தில் வந்து நிற்றல் வேண்டும்.

காங்கரஸ் ஒத்துழையாமையை உயி ர்ப்பிக்க முந்தினுல், காந்தியடிகள் தலை மையேற்று அப்புனித இயக்கத்தை நடாத்த முனைந்து நிற்கிறார். "நாட் டின் அழைப்புக் கிணங்கித் தொண்டு செய்ய யான் சித்தமா யிருக்கிறேன்" என்னுங் கருத்துப்படக் காந்தியடிகள் சென்றவாரம் பத்திரிகை நிருபரிடங் கூறியுள்ளார். காந்தியடிகளின் தலைமை வேண்டாமென்று தள்ளுவது ஒத் துழையாமை வேண்டாமென்று சொல் வதாகும். சுயேச்சையில் ஒத்துழைப் பின்பாற் பட்டதொன்றும் இருக்கிறது போலும்! போலிச் சுயேச்சைக் கூச்ச லால் ஒரு பயனும் விளையாதென்பது திண்ணம்.

தற்போது நாடுள்ள நிலையை நோக் கிச் சர்வ கட்சி மகா நாட்டின் வழி நின்று தொண்டு செய்தலே ஒற்றுமை நாடுவதென்பதைத் தலைவர்கள் உண ரின் நாட்டுக்கு நலனுண்டு. நாட்டின் ஒற்றுமை "பொருந்திய சுயேச்சை" விருப்பத்தைத் தானே எழுப்பும். சுயேச்சையை உண்மையாக விரும்பு வோர் அதற்குரிய செயலையாதல் நாட் டின்முன் காட்ட எழுவாராக.

## காந்தியடிகள்

### உண்மையோடியைந்தவாழ்வு

பாகம் 5. அத்தியாயம் 29.

ரௌலட் சட்டமும் எனது தியக்கமும்

இவ்வாறு நான் குணமடைய ஆரம்பித் திருந்த சமயத்தில், பத்திரிகைகளில் ரௌ லட் கமிட்டியின் அறிக்கையைத் தற்செய லாகப் பார்த்தேன். அதன் சிபார்சுகள் என்னைத் திடுக்குறச் செய்தன. வல்லபாய் என்னை அநேகமாகத் தினந்தோறும் வந்து பார்ப்பது வழக்கம். அவரிடம் என் சந்தே கங்களைத் தெரிவித்தேன். "ஏதாவது செய் தாக வேண்டும்" என்று நான் சொன் னேன். "இந்நிலைமையில் நாம் என்ன செய் யக் கூடும்?" என்று அவர் பதிலுக்குக் கேட்டார். அதற்கு நான் கூறியதாவது:— "யோசனையிலிருக்கும் மசோதாவை எதிர் த்து நிற்பதாகப் பிரதிக்ஞையில் கையொப்ப மிட ஒருசிலர் முன்வந்தாலும் போதும். அப் படியும் மசோதா சட்டமாகுமாயின் நாம் உடனே சத்தியாக்கிரஹம் செய்ய வேண் டும். நான் இப்படி நோய்ப்பட்டுக் கிடக்கா விடில், மற்றவர் என்னைப் பின் பற்றுவார் களென் எதிர்பார்த்துத் தன்னந்தனியனு கவே மசோதாவை எதிர்த்துப் போர் தொ டங்குவேன். ஆனுல் தற்போது என்னு டைய தீனமான நிலைமையில், நான் அப்பொறுப்பை ஏற்றுக்கொள்ளத் திறமை யற்றவனென எண்ணுகிறேன்."

இந்தப் பேச்சின் பயனுக, என்னுடன் தொடர்புடைய சிலரை அழைத்து ஒரு கூட்டங் கூட்டுவதென்று முடிவு செய் தோம். ரௌலட் கமிட்டியாரின் சிபார்சு கள், அக்கமிட்டி அறிக்கையில் வெளியான சாட்சியங்களையே கொண்டு பார்த்தாலும் போதிய ஆதாரமற்றவையாக எனக்குக் காணப்பட்டன. சுயமரியாதை யுள்ளவர் எவரும் அச்சிபார்சுகளுக்குத் தலை குனியக் கூடாதென்று எண்ணினேன்.

கடைசியாக, மேற்படி கூட்டம் ஆசிரமத் தில் நடைபெற்றது. இருபது பேருக்குமேல் அக்கூட்டத்துக்கு அழைக்கப் படவில்லை. வல்லபாயைத் தவிர, ஸ்ரீமதி சரோஜனி நாயுடு, மிஸ்டர் ஹார்னிமான், காலஞ் சென்ற ஜனுப் உமார் சோபானி, ஸ்ரீ சங் கர்லால் பாங்கர், ஸ்ரீமதி அநசூயாபாய் இவர்கள் வந்திருந்ததாக எனக்கு நினைவிருக் கிறது. சத்தியாக்கிரஹப் பிரதிக்ஞை இக் கூட்டத்திலே தயாரிக்கப்பட்டது. கூட்டத் திக்கு வந்திருந்தவர்கள் எல்லாரும் அதில் கையொப்பமிட்டதாக எனக்கு ஞாபகம். அக்காலத்தில் நான் பத்திரிகை எதுவும் நடத்தவில்லை. ஆனுல் அவ்வப்போது என் கருத்துக்களைத் தினசரிப் பத்திரிகைகளின் மூலம் வெளியிடுவது வழக்கம். அவ்வழக் கத்தின்படி இப்போதும் எழுதினேன். சங் கர்லால் பாங்கர் மிகுந்த ஊக்கத்துடன் இக் கிளர்ச்சியில் ஈடுபட்டார். இடையில் சலிப் புறுமல் நிர்மாண வேலை செய்வதற்கு அவ ருக்குள்ள ஆச்சரியமான திறமையைப்பற்றி இப்போதுதான் முதன் முதலாகத்தெரிந்து கொண்டேன்.

அப்போதிருந்த ஸ்தாபனம் எதுவும் சத் தியாக்கிரஹமென்னும் புதிய ஆயுதத்தை ஏற்றுக் கொள்ளுமென நம்புவது வீண் என்று தோன்றிய படியால், என்னுடைய யோசனையின் மேல் சத்தியாக்கிரஹ சபை என்று ஒரு புதிய அமைப்பு ஏற் படுத்தப்பட்டது. அதன் முக்கிய அங்கத்தி னர்கள் பம்பாய் வாசிகளாதலால் அதன் தலைமை ஸ்தலமும் அங்கேயே ஏற்பட்டது. இவ்வியக்கத்தில் சேர விரும்பியவர்கள் பெருந்தொகையினராகச் சத்தியாக்கிரஹப் பிரதிக்ஞையில் கையொப்ப மிடலானுர் கள். அறிக்கைகள் வெளியிடப்பட்டன. பொதுக் கூட்டங்கள் எங்கும் நடத்தப்பட் டன. இவை யெல்லாம் கேதா போராட் டத்தை நினை ஊட்டுவன வாயிருந்தன.

நானே சத்தியாக்கிரஹ சபையின் அக் கிராசனனுனேன். ஆனுல் விரைவிலேயே, அச்சபையிலிருந்த அறிவாளிகளுக்கும் எனக் கும் அதிக ஒற்றுமை ஏற்பட முடியா தெனக் கண்டேன். சபையில் குஜராத்தி மொழியையே உபயோகிக்க வேண்டுமென நான் வற்புறுத்தியதும், மற்றும் என் வேலை முறைகள் சிலவும் அவர்களுக்குப் பெரிதும் மனத்தொல்லையும், சங்கடமும் அளித்தன. ஆயினும் அவர்களில் பலரும், என்னுடைய விநோதக் கொள்கைகளையும், நடவடிக்கை களையும் பெரிய மனது செய்து பொறுத்து வந்தார்களென்பதைக் குறிப்பிட வேண் டும்.

எனினும், சபை நீண்டகாலம் நீடித்திரா தென்பது எனக்குத் தொடக்கத்திலேயே தெளிவாக விளங்கிவிட்டது. சத்தியத்தை யும் அஹிம்சையையும் நான் வலியுறுத்தி யதை அங்கத்தினர் சிலர் இதற்குள்ளாகவே வெறுக்கத் தொடங்கி விட்டார்களென் பதைக் கண்டேன். ஆயினும், ஆரம்ப காலத்தில் எங்கள் புதுமுயற்சி வெகு தீவிர மாக நடந்து இயக்கம் வலுப்பெற்று வந்தது.



வேலை அபிவிருத்தியடைய யடைய உயிர் வாழும் ஆசையும் எனக்கு அதிகமாகி வந் தது. பூரண குணம்பெற்று எழுந்திருக்க நான் அவசரப்படலானேன். மாதிரான் என்னுமிடம் சென்றால் விரைவில் சுகமடை யலாமென்று வைத்தியர்கள் சொன்னதன் மேல் அங்கே போனேன். ஆனுல் மாதிரா னில் தண்ணீர் கனமுள்ளதாகையால் நான் அங்கு வசிப்பது கஷ்டமாகி விட்டது. சீத பேதியினுல் தன் புற்றதின் காரணமாக என் ஆசனத்துவாரம் மிகவும் மெலிவுற்றிருந் தது. அதில் சிறு பிளவுகள் உண்டாயிருந்த படியால் மலங்கழிக்குங்கால் மிகக் கொடிய வலி ஏற்பட்டது. எனவே உணவருந்தும் எண்ணமே எனக்குப் பீதிவிளைத்தது. ஆத லின் ஒரு வாரம் ஆவதற்குள் நான் மாதி ரானிலிருந்து ஓடவேண்டியவனுனேன். இப்போது சங்கர்லால் பாங்கர் என் தேக சுகத்தின் பாது காவலராகத் தம்மைத்தாமே ஏற்படுத்திக் கொண்டு டாக்டர் டலாலிடம் ஆலோசனை கேட்கும்படி வற்புறுத்தினுர். அவ்வாறே டாக்டர் டலால் அழைக்கப்பட் டார். அவர் உடனுக்குடனே முடிவு செய் யுந் திறமையுடையவராயிருந்தது என் சிந் தையைக்கவர்ந்தது. ஆசனத்திலுள்ள பிளவு களைப் போக்க உடனே சந்திர சிகிச்சை செய்ய வேண்டுமென அவர் சொன்னுர். நான் உடனே சம்மதித்தேன். என்னுடைய சொந்த அறையிலேயே சிகிச்சை செய் வதில் அவருக்கு எவ்விதக் கஷ்டமும் தோன்றவில்லை. அவ்வாறே மறுநாள் சத் திரம் வைக்கப்பட்டது. சிகிச்சை முற்றிலும் வெற்றியளித்தது.

ஆனுல் இத்துடன் அவர் திருப்தியடைய வில்லை. "நீங்கள் பால் அருந்தினுலன்றி உங்கள் உடம்புக்குப் புதிய பலம் தருவிக்க என்னுல் முடியாது. பால் அருந்துவதுடன், இரும்புச் சத்தை இரத்தத்தில் ஊசியினுல் ஏற்றிக்கொள்ளவும் சம்மதித்தால், உங்கள் தேகத்தை முழுதும் முன்போலாக்கி விடுவ தற்கு நான் உத்தரவாதம்" என்றார்.

"ஊசியினுல் மருந்தேற்றுவதில் ஆட் சேபமில்லை. ஆனுல் பால் விஷயம் வேரு னது. பால் அருந்துவதில்லையென்று நான் விரதங்கொண்டுள்ளேன்." என்றேன்.

"உங்கள் விரதம் எத்தகையது? விவர மாகச் சொல்லுங்கள்" என்றார் வைத்தி யர்.

அவ்விரதத்தின் வரலாறு முழுவதும் கூறினேன். பசுவும், எருமையும் நடத்தப் படும் விதத்தைத் தெரிந்துகொண்ட பின் னர், பாலென்றாலே எனக்கு வெறுப்புண்டாகி விட்டதென்றும், மேலும், பால் மனித னுடைய இயற்கை உணவன்று என நான் கருதுவதாகவும், ஆதலின் அதை அடியோடு விட்டொழிக்க விரதங் கொண்டதாகவும் அறிவித்தேன். இந்த சம்பாஷணையைக் கேட்டுக்கொண்டு என் படுக்கைக் கருகில் கஸ்தூரிபாய் நின்று கொண்டிருந்தாள்.

"அப்படியானுல் வெள்ளாட்டுப் பால் அருந்துவதற்கு உங்களுக்கு ஆட்சேபம் என்ன? நிச்சயமாய் எதுவுமிருக்க முடி யாதே?" என்று அவள் இடையில் கூறினுள்.

உடனே டாக்டரும் அதைப் பிடித்துக் கொண்டார். "நீங்கள் வெள்ளாட்டு பால் அருந்தினுலும் எனக்குப் போதும்" என்று அவர் கூறினுர்.

நான் உறுதி பிறழ்ந்தேன். சத்தி யாக்கிரஹப் போர் நடத்தவேண்டு மென்னும் தீவிரமான அவாவினுல் உயிர் வாழும் ஆசையும் எனக்கு உண்டாகி விட் டது. எனவே, விரதத்தின் கருத்தைக் கை விட்டு அதன் எழுத்தைக் கடைப்பிடிப்பது டன் திருப்தி யடைந்தேன். நான் விரத மெடுத்துக் கொண்டபோது பசுவின்பாலும், எருமைப் பாலுமே என் மனதில் இருந்தன வாயினும், இயல்பாக அதனுள் எல்லா மிரு கங்களினும் பாலுமே அடங்கியதாகும். மற்றும், பால் மனிதனுடைய இயற்கை உணவன்று என நான் கொண்டிருக்கும் வரையில் எந்தப் பாலையும் அருந்துவது முறையாகாது. இவை யெல்லாம் தெரிந் திருந்தும் நான் வெள்ளாட்டுப் பால் அருந் தச் சம்மதித்தேன். உயிர் வாழும் ஆசை சத்தியப்பற்றினும் வலிமை மிக்கதாகி விட்டது. எனவே சத்திய உபாசக னுன நான், இந்த ஒரு முறையில், சத்தியாக்கிரஹப் போர் ஆவலுக்கும் ஆவல் காரணமாக, எனது புனித இலட்சியத்தைச் சிறிது விட்டுக் கொடுக்கலானேன். இதன் ஞாபகம் இன்றளவும் என் இதயத்தை ஓயாது வருத்திக் கொண்டிருக்கிறது. வெள் ளாட்டுப் பாலை விடுவதெப்படி என்று இடைவிடாமல் சிந்தித்து வருகிறேன். ஆனுல், ஆசைகளுக்குள் மிக நுண்ணிய தாகிய தொண்டுபுரியும் ஆசை இன்னும் என்னைப்பற்றி நிற்கிறது. அதினின்றும் இன்னும் நான் விடுதலை பெறக்கூடவில்லை. எனக்கு உணவுச்சோதனைகளும் அஹிம்சைச் சோதனைகளின் ஒரு பகுதியேயாதலின் அவை மிக அருமையானவை யாகும். அவை யே எனக்குப் பொழுதுபோக்கும் சாதனங் களாக மகிழ்ச்சி தந்து வருகின்றன. ஆனுல் வெள்ளாட்டுப்பால் அருந்துவது அஹிம்சா உணவு நெறிக்கு விரோதமென்ற காரணத் தினுல் அஃது எனக்கு அத்துணைத் துன்பந் தந்துவரவில்லை. விரதபங்கம்செய்துவிட்டே னே, சத்தியத்தைக்கைவிட்டேனே என்னும் துயரமே அதிகமாயிருக்கிறது. அஹிம்சா தர்மத்தைவிடச் சத்திய இலட்சியத்தை நான் நன்குணர்ந் திருப்பதாய் எண்ணுகிறேன். சத்தியத்தைக் கைவிட்டேனுயின், அஹிம் சையென்னும் சிக்கலை என்னுல் அவிழ்க்கவே முடியாதென அநுபவத்திலிருந்து உணர்ந் திருக்கிறேன். பிரதிக்ஞைகளின் எழுத்தை மட்டுமல்லாது கருத்தையும் அநுசரித்து நடப்பதே சத்திய இலட்சியத்தைக்கடைப் பிடிப்பதாகும். இவ்விஷயத்தில் என் பிரதிக் ஞையின் வெளி உருவத்தைக் காப்பாற் றினேனே யல்லாமல், அதன் கருத்தை - ஆத்மாவை - கொன்று விட்டேன். இது தான் எனக்குப் பெரிதும்மனவேதனை தந்து வருகிறது. இத்தகைய தெளிவான அறிவு இருந்தும் என்முன்பு நேரிய வழியைக்காண் கிறேனில்லை; அல்லது நேர்வழியில் செல்ல எனக்குத் தைரியமில்லை யென்றும் சொல்ல லாம். இரண்டும் அடிப்படையில் ஒன்று தான். ஏனெனில் சந்தேகம் என்பது, நம்பிக்கை யின்மை, அல்லது நம்பிக்கைக் குறைவின் விளைவேயாகும். எனவே," ஆண் டவனே! எனக்கு நம்பிக்கை அருள்வாய்" என்று இரவும் பகலும் நான் பிரார்த்தித்து வருகிறேன்.

## லஜபதி வாழ்க!

### லாகூரில் சைமன் கமிஷன்

### போலீஸ் தடியடியும் லஜபதியின் கர்ச்சனையும்

சென்ற அக்டோபர்மீ 30உ சைமன் கமி ஷன் லாகூருக்கு வந்துசேருமெனத் தெரிய வந்ததின்மேல், லாகூர் காங்கிரஸ் கமிட்டி யும், சர்வகட்சிக் கமிட்டியும் அன்று கறுப்புக் கொடி ஊர்வலங்கள் நிகழ்த்தவும், கண்ட னக் கூட்டங்கள் நடத்தவும் தீர்மானித் திருந்தன. போலீஸ் தலைவரின் அநு மதி பெருமல் எவ்வகை ஊர்வலமும் விடக்கூடாதென்று ஜில்லா மாஜிஸ்ட்டிரேட் 144வது பிரிவின்படி தடையுத்திரவு போட் டார். இவ்வுத்திரவைமீறி ஊர்வலம் நடத் துவதென்று பகிஷ்காரத் தலைவர்கள் தீர் மானித்தார்கள். இந்தச் சங்கடத்திலிருந்து விடுபடும் பொருட்டு, குறிப்பிட்ட இரண் டொரு வீதிகளில் மட்டும் ஊர்வலம் போகக் கூடாதென்றும், மற்றத் தெருக் களின் மூலம் போகலாமென்றும் கடைசி யாகப் போலீஸ் உத்திரவு பிறந்தது.

அன்று பிற்பகல் 1 மணிக்கு மோரி வாயில்(கேட்) என்னுமிடத்திலிருந்து பகிஷ் கார ஊர்வலம் "சைமனே திரும்பிப்போ" என்று பொறிக்கப்பட்ட கறுப்புக் கொடி களுடன் கிளம்பிற்று. லாலாலஜபதிராய், பண்டித மாளவியா, சர்தார் மங்களசிங், டாக் டர் முகமது ஆலம், லாலா துனி சந்து, டாக் டர் சத்தியபால், ரெயிஸாதா ஹன்ஸ் ராஜ், மௌலானு ஸாபர் அலி, மௌலானு அப்துல் குவாதிர் முதலிய தலைவர்கள் ஊர்வலத்தை நடத்திச் சென்றார்கள். ஊர்வலம் மிக்க உற் சாகத்துடன் குறிப்பிட்ட வீதிகளின் வழியே சென்று கடைசியில் சைமன் கமி ஷனுர் வந்திறங்க விருந்த ரயில்வே ஸ்டே ஷன் அருகில் சேர்ந்தது. அங்குப் போலீ ஸார் முள்கம்பிகளினுல் பலமான வேலி அமைத்திருந்தனர். வேலியில் ஓரிடத்தில் சிறு வழி ஒன்று இருந்தது. முன்னணியில் சென்ற தலைவர்கள், அவ்வழியின் மூலமாய் ஜனங்கள் உட்புகுந்து விடாவண்ணம் அத னருகே தடுத்துக்கொண்டு நின்றனர். அச் சமயத்தில்தான் வேலிக்கு அப்புறத்தில் நின்ற போலீஸார் திடீரென்றுகூட்டத்தைத் தடி கொண்டு தாக்கினர்.

லாலா லஜபதிராய் விடுத்துள்ள அறிக் கையில் கூறுவதாவது :—"போலீஸார் ஜனங் களைத் தாக்கியது முற்றும் அகாரணமான தாகும். இதை முன்னின்று நடத்தியவர் போலீஸ் சூபரிண்டெண்டே என்று எனக் குச் சொல்லப்படுகிறது. அவர் என் மார் பின்மீது இரண்டடி அடித்தார். இரண் டொரு கான்ஸ்டேபிள்களும் தடியினுல் அடித்தார்கள். நல்ல வேளையாக அவை என் மேல் விழவில்லை. மார்பில் இதயப் பிர தேசத்துக்கு மேலே விழுந்த அடிகளால் அங்கே காயமும் வீக்கமும் ஏற்பட்டிருக்கின் றன. சிறிதும் சுரமும் உண்டாகி யிருக்கி றது. என்னை அடித்தவனுடைய பெயரை ஐந்தாறு முறை கேட்டேன். 'நீ மனிதனுனுல் உன் பெயரைச் சொல்' என்று ஒரு முறை கத்தினேன். அவன் பதிலளிக்கவில்லை. கூட்டத்திலிருந்த ஜனங்கள் 'சைமனே, திரும்பிப்போ' என்று கூவியதைத் தவிர மற்றப்படி முற்றும் ஒழுங்காக நடந்து கொண்டார்கள். போலீ ஸாருக்குக் கோப மூட்டத்தக்க செயல் அவர் கள் எதுவும் செய்யவில்லை. * * * ஊர்வலம் என்னுடைய தலைமையில் நடக்கவில்லை. ஆயி னும் நான் அடிபட்டவுடனே, தலைமை ஏற் றுக்கொண்டேன். என்னுடைய வேண்டு கோளின் மீது அவ்வளவு ஜனங்களும் கீழே உட்கார்ந்தார்கள். நான் அடிபட்டதினுல் அவர்கள் மிக்க ஆத்திரங் கொண்டிருந்தும் அமைதி பாதுகாத்தது ஆச்சரியப்படத்தக்கதா யிருந்தது. மேற்கூறிய ஐரோப்பிய உத்தி யோகஸ்தனே ஹன்ஸ்ராஜ் முதலியோரை யும் அடித்தான்."

இச்சம்பவத்தைக் குறித்து வெளியான உத்தியோகமுறை அறிக்கை ஒன்றில், கூட் டத்திலிருந்தவர்கள் முள் வேலியைக் கடந்து உள்ளே செல்ல முயற்சித்ததாகவும், போலீ சாரின்மேல் கற்கள் எறியப்பட்டதாகவும், அதன் பிறகே போலீஸார் தடிப்பிரயோகம் செய்ததாகவும் கூறப்பட்டிருந்தன. லாலாஜி இவற்றை அடியோடு மறுத்து "உத்தியோக முறை அறிக்கையில் பொய்கள் நிரம்பி யிருக் கின்றன. அதை எழுதியவர் என்மீது அவதூறு வழக்குக் கொண்டு வரட்டும். அப் போது போலீஸ் அதிக்கிரமங்களை நீதிமன் றம் ஒன்றில் வெளிப்படுத்த எனக்குச் சந் தர்ப்பம் கிடைக்கும்" என்று கூறியுள்ளார்.

மேற்கூறிய சம்பவத்துக்குப் பின்னர், முன்னரேஏற்பாடுசெய்திருந்தபடி ஊர்வலத் திலிருந்த ஜனங்கள் டில்லி வாயில்(கேட்டு)க் குத்திரும்பிச் சென்றார்கள். அங்கிருந்துபண் டித மாளவியாவின் தலைமையில் மீண்டும் பெரியதோர் ஊர்வலம் கிளம்பி மிகுந்த உற் சாகத்துடன் வீதிகளின் வழியே சென்றது. ஊர்வலம் அநார்க்கலி கடைத்தெருவிற்கு வந்ததும், அது தடுக்கப்பட்ட வீதிகளில் ஒன்றாதலின் போலீஸார்அணிவகுத்துநின்று கூட்டத்தை மறித்தனர். பண்டித மாளவியா தம்மையும் மற்றவர்களையும் சட்டம் மீறிய தற்காகக் கைது செய்யும்படிஅங்கிருந்த நகர மாஜிஸ்டிரேட்டினிடம் சொன்னுர். மாஜிஸ் டிரேட் அதற்கிணங்கவில்லை. ஜனங்கள் போலீஸ் அணியைப் பிளந்துகொண்டு முன்னேற விரும்பினுர்களாயினும் அது அஹிம்சா தர்மத்துக்கு விரோதமான படி யால் பண்டித மாளவியா முதலிய தலைவர் கள் ஜனங்களை அமைதிப்படுத்தி அங்கேயே உட்காரச் செய்தனர். சுமார் முக்கால் மணி நேரம் உட்கார்ந்திருந்துவிட்டு மாலை 7-30க்கு மோரி வாயிலில் (மோரிகேட்) நடக்கவிருந்த பொதுக் கூட்டத்துக்குச் சென்றார்கள்.

அங்குச் சுமார் 15 ஆயிரம் ஜனங்களுக்கு மேல் கூடிய பெருங் கூட்டம் 5-மணி நேரம் நடந்தது. லாலா லஜபதிராய் தலைமை வகித் துப் பேசியதின் சாராம்சம் வருமாறு :—

"சிற்சில காரணங்களால் இன்றைய நட வடிக்கைகளில் கலந்து கொள்ள விருப்பமில் லாதவனுயிருந்தேன். ஆனுல் இன்று காலை எடாவாவிலிருந்து திரும்பி வந்ததும் 144-வது தடை யுத்தரவைப் பற்றிக் கேள்விப் பட்டேன். உடனே என் தீர்மானத்தை மாற்றிக் கொண்டேன். உள்ளூர் காங்கரஸ் தலைவர்களுடன் எனக்கு அபிப்பிராய பேதம் என்ன விருப்பினும் நெருக்கடியான காலங் களில் எப்போதும் அவர்கள் பக்கல் நிற் பேன் என்பதாக வாக்களித்திருந்தேன். அதை இன்று நிறைவேற்றி விட்டேன். ரயில்வே ஸ்டேஷனில் கூடிய நாம் போலீ ஸாரால் தாக்கப்படுதற்குரிய காரியம் எது வும் செய்யவில்லை. முற்றும் அமைதியாக விருந்தோம். ஆயினும் ஒரு போலீஸ் உத் தியோகஸ்தர் நம்மை அடிக்கத் தொடங்கி னுர். அவர் போலீஸ் சூப்பிரண்டெண்ட் என்றும், அவர் பெயர் ஸ்காட் என்றும் பின் னுல் தெரியவந்தன. அவர் என்னை இரண்டு முறை அடித்தார். ஹன்ஸ் ராஜ், கோபி சந்த், ஆலம், 'சத்தியபால் முதலியோரும் அடிக்கப்பட்டனர். இவர்களில் எவரும் போலீசாரால் இவ்வாறு கோழைத்தனமாக அடிக்கப்படுவதற்கு உரியதெதுவும் செய்ய வில்லையென நான் சத்தியம் செய்வேன். ஆயிரக்கணக்கான மனிதர்களடங்கிய அக் கூட்டத்தில் இரண்டொருவருக்குமேல் கைப் பிரம்புகூட வைத்திருக்கவில்லை. அவ்விரண் டொருவரில் நான் ஒருவன். நான் பொறுமை யிழந்து என் பிரம்பை உபயோகியாமலிருந்த தற்காக இறைவனுக்கு நன்றி செலுத்து கிறேன். அப்படிச் செய்திருந்தால் நிலைமை நெருக்கடியாய்ப்போயிருக்கும்.என்கட்டளைக் குக்கீழ்ப்படிந்து கீழேஉட்கார்ந்து பதிலுக்குப் பதில் செய்யாமலிருந்த இளைஞர்களுக்கு வந் தன மளிக்கிறேன். இது ஐரோப்பியப் போலீஸ் உத்தியோகஸ்தர்களை வெட்கிக்கச் செய்திருக்க வேண்டும். ஆனுல் அரசிய லதிகாரத்தினுலும் இராணுவ பலத்தினுலும் ஏற்படும் திமிர் எதற்கும் அஞ்சுவதில்லை.

"எவ்விதக் குற்றமும் செய்யாத நிராயுத பாணியான ஒரு கூட்டத்தை, எவ்வித எச் சரிக்கையும் செய்யாமல் தாக்கியடிப்பதைப் போல் கோழைச் செயல்வேறொன்றுமில்லை. ஆனுல் இத்தகைய கோழைகளின் உதவி யைக் கொண்டு இவ்வரசாங்கம் ஆட்சி புரிவ தைக்குறித்து நான் சந்தோஷமடைகிறேன். ஏனெனில் இத்தகையோரின் தொகை எவ் வளவுக்கெவ்வளவு அதிகமாகிறதோ, அவ் வளவுக் கெவ்வளவு விடுதலை உதய மாகும் நான் சமீபிக்கின்றது. நம்மீது வீசப்படும் ஒவ்வோர் அடியும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சவப் பெட்டிமீது அடித்த ஓர் ஆணியேயாகும். இன்னும் அதிக தடி அடிகள் தாங்கிக் கொள்ளவும் நாம் தயாரா யிருக்கிறோம். அதிகாரவர்க்கத்தின் கீழ்ச்ச நாம் அவற்றிற்கே தகுதியுள்ளவர்களாவோம். இத்தகைய நிகழ்ச்சிகள் மேலும் மேலும் நடந்துகொண்டிருக்குமாயின் இளைஞர்களைப் புரட்சிஇயக்கத்தில்தலையிடாமல்தடுக்கஎன்னு லும், பண்டித மாளவியாவினுலும் முடியா மல் போய்விடும். சைமன் கமிஷனின் ஆற்றலுக்கும், அரசாங்கத்தின் பலத்துக்கும் இதுவே அறிகுறியானுல், கமிஷனர்களைக் கண்ணைக் கட்டி விட்டு நேரே அரசாங்க மாளிகைக்கே கொண்டு போகலாமே!"

## மதிப்புரை

### நவீனகதா புத்தகசாலையின் அரும்பெருங் காலெண்டர்

இரங்கூனிலுள்ள நவீனகதா புத்தக சாலையார் வெளியிட்டுள்ள 1929-ம் ஆண்டுக் காலெண்டர் வரப்பெற்றோம். அக்காலெண்டரில் இருவித மிருத்தல் கண்டோம். ஒன்று இங்கிலீஷ் அராபி தமிழ்த் தேதிகளுடையது; மற்றொன்று இங்கிலீஷ் உருது தமிழ்த் தேதிகள் கொண்டது.

அக்காலெண்டர் விளம்பரத் தின் பொருட்டு வெளியிட்டிருப்பதாகத் தெரியவில்லை. என்றும் நின்று பயன் தரத்தக்க முறையில் அக்காலெண்டர் செப்பஞ் செய்யப்பட்டிருக்கிறது.

காலெண்டரின் அமைப்பும், பரப்பும், எடுப்பும், நிறங்களும், அச்சும், காகித மும், பிறவும் மனதைக் கவர்கின்றன. பொதுவாக எல்லார்க்கும் - சிறப்பாக முஸ்லீம்கட்கும் பயன்படு முறையில் காலெண்டர் ஆக்கப்பட்டிருக்கிறது.

காலெண்டர், தன் ஒவ்வோர் ஏட்டி லும் மக்கா மதினு ஜெருசலம் முதலிய திருப்பதிகளை அழகிய ஹாப்டோன் பட வடிவில் முறை முறையே தாங்கிநிற் கிறது. அப்படங்களின் வல இடப்பக் கங்களில் திருப்பதிகளின் சிறப்புக்கள் சுருக்கமாக வரையப்பட்டிருக்கின்றன. படங்களின் வனப்பும், திருப்பதிகளின் சிறப்பு மொழிகளும் காலெண்டரின் முடியணியாகத் திகழ்கின்றன.

தேதிகளும் பிறவும் விதவிதமான நிறக்காட்சி வழங்கல் கருத்தை ஈர்க்கி றது. காலெண்டரில் ஆறுவித நிறங் கள் ஆங்காங்கே அழகு செய்துகொண் டிருக்கின்றன.

ஹிந்து முஸ்லீம் நோன்பு நாட்களும், பிற நன்னுட்களும், அவ்வத் தேதியின் தலைப்பில் கண்ணைக் கவருமாறு பதிக் கப்பட்டிருத்தல் காலெண்டரின் சிறப் புக்களுள் ஒன்று. அந்நாட்களை முயற்சி யின்றி எளிதில் எவரும் உணர்ந்து கொள்ளும் ஒழுங்கு காலெண்டரில் அமைந்திருக்கிறது.

எல்லாச் சிறப்புக்கட்கும் மேலாக வேறொரு சிறப்பு காலெண்டரில் மிளிர் கிறது. பிற சிறப்புக்களெல்லாம் காலெ ண்டரின் உடல்போன்றன. அதன் உயி ராகவுள்ள ஒருசிறப்பே மகிழ்ச்சி யூட்டு கிறது. அஃதென்னை?

காலெண்டரின் ஒவ்வொரு பக்கத் திலும் திருக்குரான் அமுதமொழி களும், நபிநாயகத்தின் அருண் மொழி களும் ஆன்மாவிற்குப் பெரு விருந் தெனப் பொலிகின்றன. கால தேச வர்த்தமானத்துக் கேற்ற முறையில் அம்மொழிகள் திரட்டப்பட்டிருக்கின் றன. நபிநாயகத்தின் இறுதிச் சொற் பொழிவுகள் மூன்றுங் காலெண்டரை ஒளி செய்கின்றன. அக் காலெண்டர் காலெண்டராகத் துணை புரிவதோடு ஒரு நூலாகவுந் துணை புரியுமென்று சுருங்கச் சொல்கிறோம்.

இம்முறையில் காலெண்டரைச் செப் பஞ் செய்து நாட்டுக்குதவிய நவீன கதா புத்தகசாலையார்க்கு நமது நன்றி யறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இக்காலெண்டரைப் பொதுவாக எல் லாரும்-சிறப்பாக முஸ்லீம்களும் வாங் கிப் பயனுறுவாராக.

விலை ரூபா 1. விலாசம் : 121, மங்க மாரி தெரு, இரங்கூன்.

# கலம்பகம்

இராஜபாளையத்தில் கலைமகள் விழா வன்று உயர்திருவாளர் ம. ரா. குமாரசாமிப் பிள்ளை அவர்களால் "காந்தீயம்" என்னும் பொருள் பற்றி அரிய உபந்யாசம் நிகழ்த்தப்பட்டது என்று ஒரு நிருபர் எழுதிஇருக்கிறார்.

o o o

நிகழும் நவம்பர் 15-ந் தேதி திண்டுக்கல் பொள்ளாச்சி இருப்புப்பாதை கனம் கவர்னர் அவர்களால் திறந்து வைக்கப்படும். இனி, பழனிக்குச் சுலபமாக யாத்திரை செய்யலாம்.

o o o

இராஜப் பாளையத்தில் 30-10-28ல் சாலிய மஹாஜன வாசகசாலையில் ஸ்ரீமான் ஆறுமுக மூப்பனர் அவர்களால் இனிமையான சங்கீதக் கச்சேரி நடந்தது என்று ஓர் அன்பர் அறிவிக்கிறார்.

o o o

தென் திருவிதாங்கூர் திருநெறித் தொண்டர் குழாம் முதல் ஆண்டு நிறைவு விழா (4-11-28) சென்னை அட்வகேட், தாகூர் சட்டவிரிவுரையாளர் திருமிகு கா. சுப்பிரமணியபிள்ளை M. A., M. L., அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றதாம்.

o o o

சென்றவாரம் மசூலிப்பட்டணம் முனிசிப் கோர்ட்டில் முடிவுபெற்ற வழக்கின் சம்பந்தமாகத் தாக்கல் செய்யப்பட்ட பத்திரங்களிலிருந்து காரா அக்ரகாரசிவன் கோயிலுக்கு நிஜா மூல்மல்க் 2000 ஏக்கர் நிலம் மான்யம் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது.

o o o

சீனதேசிய அரசாங்கத்தின் சட்டசபையில் ஸ்ரீமதி சயாங் - காய் - ஷேக் ஒரு ஸ்தானம் பெற்றுள்ளார். இவர் குடியரசின் புதிய அக்கிராசனராகிய தளபதி சயாங் - காய் - ஷேக்கின் மனைவியும், காலஞ்சென்ற ஸன் யாட் - ஸென்னின் சகோதரியுமாவார்.

o o o

சென்னை மண்ணடிருக்கருகேயுள்ள மாபுஸ்கான் தேவடியில் ஒரு முஸ்லீம் மிட்டாய்க் கடைக்காரர் மீது சர்க்கரை காய்ச்சிக்கொண்டிருந்த கடாய் வீழ்ந்ததால், அவர் தேகமெங்கும் சர்க்கரைப் பாகுபட்டு இரணமாகிவிட்டது. அவர் வைத்திய சாலையில் மிகவும் கேவலமான நிலையில் இருக்கிறார்.

o o o

அப்துல் சத்தார் என்கிற முஸ்லீம் வியாபாரி ஆர்க்காட்டிலிருந்து ஆரணிக்கு ஒரு வண்டி நிறையப் பட்டாஸ் கட்டுகளையும் வெடிகளையும் ஏற்றிக்கொண்டு சென்றாராம். வழியில் வண்டி ஆடி அசைந்ததால் பட்டாஸ் வெடித்து வண்டி முழுதும் சாம்பலாய் விட்டதுமன்றி அந்த முஸ்லீம் வியாபாரியும் மாணமடைந்தார்.

o o o

ஒரு மாதத்திற்கு முன்பு இரங்கூனிலுள்ள மாந்தலே என்னுமிடத்தில் மாத்தா என்னும் ஏழை பர்மியப் பெண்ணுக்குக் கர்ப்பத்திலேயே இறந்துபட்ட இருதலைகளையுடைய அழகான ஒரு பெண் மகவு பிறந்தது. அதை ஒரு டாக்டர் திராவகத்திலிட்டு வைத்திருக்கின்றார். இவ்வதிசயத்தை அவ்வூரிலுள்ள ஜனங்கள் கண்டு செல்கிறார்கள்.

o o o

இருவாரங்களுக்குமுன்பு செக்ரடேரியட் சேவகனான நாராயணராவ் நடந்து செல்லும்போதே திடீரென்று சென்னை யூனிவெர்ஸிட்டி கிளப் அருகே வீழ்ந்து மரணமடைந்தார். பிரேதத்தின் ஒரு கையில் மாத்திரம் காப்பு இருந்ததாம். மற்றொரு கையிலிருந்த காப்பை இரண்டு சிறுவர்கள் திருடியதாகக் கைதி செய்யப்பட்டிருக்கின்றனர். மரண விசாரணையில் இயற்கை மரணமென்றே முடிவு செய்யப்பட்டது.

o o o

ஓர் ஐரிஷ் தேசத்து மாது ஓர் அமெரிக்க வாலிபரைக் கலியாணஞ் செய்து கொள்ளப் பாரிஸுக்கு வந்தாளாம். திருமணச் சடங்கு நடைபெறும் போது மாப்பிள்ளை இருக்க வேண்டிய ஸ்தானத்தில் மாப்பிள்ளையினுடைய தோழன் இருந்ததால், அவனுக்கே திருமணம் நடந்தேறி விட்டதாம். ஒருவருடைய மொழியை ஒருவர் தெரிந்து கொள்ளாததே இதற்குக் காரணமென்று சொல்லப்படுகிறன.

o o o

ஆஸ்திரேலியாவிற்கு வடக்கேயுள்ள மிலின் கிம்பி என்கிறதீவில் ஒரு வகைக் காட்டுமிராண்டி ஜாதியார் வசிக்கின்றார்களாம். அவர்களுக்குக் குட்டையான வால் இருக்கின்றதாம்! இளைஞர்கள் இளங்குழந்தையின் மாமிசத்தையும், வயதில் மூத்தவர்கள் இளம்பெண்கள் மாமிசத்தையும் புசிப்பது வழக்கமாம். அந்த ஜாதியாரிடத்தில் இது போன்ற பலவிதக்கொடிய வழக்கங்கள் இருக்கின்றனவென்று சர் ஹியூபர்ட்வில்கின்ஸ் என்பவர் கூறுகிறார்.

o o o

மாஜிஜெர்மன் கெய்சருடைய நான்காம் புதல்வனின் மனைவியாரும் மிக்க வனப்பு வாய்ந்தவரும், சில ஆண்டுகளுக்கு முன் மோட்டார் ஓட்டியுடன் ஓடிப்போன வருமான சாண்டியா விக்டோரியா தற்பொழுது இங்கிலாந்துக்கு விஜயம் செய்திருக்கிறார். இன்பமில்லாமல் மிகவும் ஆடம்பாத்துடன் அரண்மனையில் தன்மீது காதலில்லாத இவ வாசனிடம் வாழ்வதைக் காட்டிலும் தன் மீது காதலுள்ள மோட்டார் ஓட்டியுடன் வாழ்வதே சாலச்சிறந்தது என்றும் மற்றும் எத்தகைய செல்வ வாழ்வும் ஒரு மணிநேர இன்பவாழ்க்கைக்குச் சமமாகாதென்றும் அவ்வம்மையார் கூறுகிறாராம்.

o o o

இந்தியா மந்திரியினுடைய உத்தரவு பெற்று இந்தியா அரசாங்கத்தார் புதுக்கோட்டை ராஜாபட்டத்திற்கு ஸ்ரீராஜகோபாலத் தொண்டமானை நியமித்திருக்கிறார்கள். இவர் மைனர். இவர் ஸ்ரீ திருமலராயத் தொண்டமானின் வம்சத்தைச் சேர்ந்தவர். மேற்படி பீடத்திற்கு ஸ்ரீமான் இராமச் சந்திர தொண்டைமான் உரிமையும், காலஞ்சென்ற அரசரின் ஆஸ்திரேலியஞ் மனைவிக்குப் பிறந்த ஸ்ரீசிட்னி மார்த்தாண்டன் உரிமையும் அங்கீகரிக்கப்படவில்லை.

o o o

லண்டனில் ரீஜன்ட் நந்தவன சாலையில் டாக்டராக விருக்கும் ஜி. எஸ். கே. ஐயர், தன் பெண்ணை மறைத்து வைத்துவிட்டதாகக் கூறிச் சண்டையிட்டு ஸ்ரீமதி வாக்கர் என்னும் ஆங்கில மாது மேற்படி டாக்டரின் கன்னத்தில் அறைந்தாளாம். பிறகு மாஜிஸ்டிரேட்முன்னிலையில் அய்யர் அந்தப் பெண் சில நாள் சிகிச்சையிலிருந்து பின்னர் எங்கேயோ போய்விட்டதாகக் கூறினார். மாஜிஸ்டிரேட் அய்யர்மீது குற்றமில்லையென்று கூறி ஸ்ரீமதி வாக்கருக்கு 50 ரூபா அபராதம் விதித்தார்.

o o o

அண்மையில் இங்கிலாந்தில் கிளாஸ்கோ சர்வகலாசாலை அத்தியட்சகர் பதவிக்குத் தேர்தல் நடைபெற்றது. வாக்குகளை எண்ணும் போது மாணவர்களைக் கட்டிடத்திற்குள் பிரவேசிக்க அநுமதிக்கவில்லையாம். எனவே, மாணக்கர்கள் சீற்றங் கொண்டு உள்ளே விட மறுத்தவர்கள் மீது சுமார் 60 ஆயிரம் முட்டைகளையும் ஆயிரக் கணக்கான மீன் தலைகளையும் அழுகிப்போன பழத்தோல்களையும் வீசி எறிந்து சண்டையிட்டார்களாம். மேற்படி தேர்தலில் முதன் மந்திரி பால்டுவின் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

o o o

சீகாழி தாலுக்கா அரசூர்கிராமத்திலுள்ள ஒரு குளத்தில் வெங்கிட்டு என்கிற ஒரு பையன் குளிக்கப் போனான். அங்கிருந்த ஒருமுதலை அவனை நன்றாகப் பிடித்துக் கொண்டது. அவ்வூர் ஜனங்கள் யாது செய்வது என்று தோன்றாமல் பிரமித்து நிற்க, அருணாசலம் என்னும் வாலிபர் மிகவும் கஷ்டப்பட்டுப்பையனைமுதலைவாயினின்றும் தப்புவித்தார். ஆயினும், அப்பையனுடைய வலது கையை அம்முதலை துண்டித்து விட்டது. அந்த முதலையைப் பிடிக்க முயற்சி செய்து வருகிறார்கள்.

o o o

சிவகிரியில் வல்லபாண்டியத் தேவன் என்பவன் மிகவும் குடித்துவிட்டு வெறிமேலீட்டினால் கலாம் விளைத்தது மன்றித் தன்னைப் பிடிக்க வந்த போலீஸ்காரனைச் செருப்பால் அடித்ததாக ஒரு வழக்கு கோவில் பட்டி சப்டிவிஷனல் மாஜிஸ்டிரேட் முன் கொணரப்பட்டது. தேவன் குடி வெறியினால் தன் அறிவை யிழந்து தன் செய்கையின் முடிவு இத்தகையதென்று உணரக் கூடாத நிலையில் இக்குற்றத்தைச் செய்திருப்பதாக மாஜிஸ்டிரேட் கூறிச் சொற்பதண்டனையாக அதாவது ஒரு மாதக்கடின காவல் தண்டனை விதித்தார்.

o o o

லண்டனில் ஒருகடையில் ஸ்ரீமதி பார்ட்லப் என்கிற 23 வயதுடைய ஒருபெண் தலையில் காயத்துடன் படுக்கையில் இறந்து கிடந்தாளாம். அந்தப் பெண்ணின் தகப்பனார் கல்கத்தாவில் நடத்தி வந்த வியாபாரத்தில் பெருமிதமான லாபம் கிடைத்ததென்றும், ஆனால் ஓர் இந்தியரின் சாபத்தினால் தகப்பனாரும் தாயும் சின்னாட்களுக்கு முன் இறந்து விட்டதாயும் சொல்லப்படுகின்றன. அந்தச் சாபத்தினால் தான் அடியோடு அக்குடும்பமே நாசமாய் விட்டதென்றும் கருதப்படுகிறதாம். இதன் சம்பந்தமாக லண்டனில் ஒருவனைக் கைது செய்திருக்கிறார்களாம்.

o o o

சென்ற புதன்கிழமை சென்னை ஹைகோர்ட்டில் ஒரு விநோதம் நடந்தது. வெளியூரான் ஒருவன் கோர்ட்டு ஆரம்பிக்கு முன்னர் வந்து நீதிபதியின் ஆசனத்தில் உட்கார்ந்து கொண்டான். பின்னர் அவனைப் பகீரதப் பிரயத்தனம் செய்து ஆசனத்தினின்றும் அப்புறப்படுத்தி வெளியே அழைத்துச் சென்றனர். நீதிபதி ஆசனத்தில் ஏன் அமர்ந்தாய் என்று கடாவியதற்கு நீதிபதிக்கு உள்ள ஆற்றல் தனக்கும் உண்டென்றும் நீதிபதியைப்போல் தான் ஏன் வழக்குகளை விசாரித்து நீதி வழங்கலாகாது என்றும் அவன் விடையிறுத்ததாகக் கூறப்படுகிறது.

o o o

அருப்புக்கோட்டை ஸ்ரீமான் மூதலாளி மூ. வாசகசாலையின் கூட்டத்தில், திருவாளர் ச. சு. பழனிச்சாமி நாடார் அவர்கள் இங்கர் யூனியன்போர்டு அங்கத்தினராக நியமனம் செய்யப்பெற்றதையும், பட்டிவீரன்பட்டி திருவாளர் ஊ. பு. அ. சௌந்திர பாண்டிய நாடார் அவர்கள் இராமநாதபுரம் ஜில்லா போர்டு தலைவர் பதவிக்குச் சென்னை அரசாங்கத்தாரால் நியமனம் செய்யப் பெற்றதையும் பாராட்டியும் மகிழ்ச்சி தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேறியதாக அறிவிக்கப்படுகிறது.

o o o

நாவலூற்றுச் சமரச சன்மார்க்க சங்கம்:— தீபாவலிப்பண்டிகை குறித்துச்சங்கத்தார் ஓய்வு பெற்றுக் கொண்டமையான், இருபத்தேழாந்திங்கட்கூட்டம் நடை பெற வியலாதென்பதை அங்கத்தினர் முதலாயினோர்க்குத் தெரிவித்துக் கொள்கின்றோம். எனவே, நமது சங்கத்தின் கொள்கைகட்கேற்பக் கதருடை புனைதலும் புலால் உணவு நீத்தலுமாகிய இருகொள்கைகளை அன்பர்கள் தீபாவலிக் கொண்டாட்டத்தில் தவறாது கைக்கொள்வதோடு தங்கள் நண்பர் முதலாயினோரையும் பண்டிகையன்று கதர்க்கட்டவும் உயிர்வதைபுரியாமல் சைவ உணவையே கொள்ளவும் செய்விக்க வேண்டுகின்றோம். எனச் சபைத்தலைவர் எழுதுகிறார்:

o o o

நார்வே எண்ணெய்க்கப்பல்ஒன்று 13 ஆயிரம் டன் மண்எண்ணெய் ஏற்றிக்கொண்டு வரும்போது ஹூக்ளிநதியின் ஓர் இடத்தில் தரைதட்டியதால் போபத்து ஏற்படத்தக்க நிலையிலிருந்ததாம். அதனால் அக்கப்பல் தலைவன் ஐயாயிரம் டன் எண்ணெயை நதியில் திறந்து விட்டு விட்டது மன்றி, பெரும் முயற்சியினால் பட்ஜ்பட்ஜ் துறைமுகத்திற்குக் கப்பலைப் பத்திரமாகக்கொண்டு வந்து சேர்ந்தான். நதியில் மிதக்கும் எண்ணெயில் தீப்பிடித்துக்கொண்டால் மிகவும் அபாயம் விளையுமென்று கப்பல் கம்பெனிகளுக்கெல்லாம் எச்சரிக்கை செய்திருக்கிறார்கள். நதியின் கரையில் வசிக்கும் ஏழை மக்கள் எண்ணெயை மொண்டு கொள்ளப் படகுகளில் செல்கிறார்களாம்.

o o o

அவிநாசிதாலுக்காவிலுள்ளசொக்கம்பாளையம் என்ற கிராமம் தேசிய விஷயங்களில் மிக்க ஊக்கம் செலுத்திவரும் கிராமமாகும். இக்கிராமத்தாரால் காந்தியடிகளின் தமிழ் நாட்டு விஜயத்தின்போது அவருக்குப்பண முடிப்பு அளிக்கப்பட்டது. ஏறக்குறைய இக்கிராமத்திலுள்ள ஆடவர் அனைவரும் கதராடை அணிகின்றனர். ஆனால் காங்கிரஸ் கமிட்டி ஒன்றமட்டும் இக்கிராமத்தில் இல்லாமலிருந்தது. அக்குறையும் இப்போது நீங்கிவிட்டது. சேலம் ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீமான் பழனிச்சாமிப்பண்டாரம் அவர்களின் முயற்சியால் ஸ்ரீமான் ந. சீரங்க செட்டியாரை அக்கிராசனராகவும் ஸ்ரீமான் வெ. சீனிவாசம் அவர்களைக் காரியதரிசியாகவும் கொண்ட ஒரு காங்கிரஸ் கமிட்டி ஐப்பசிமீ 10உ அமைக்கப்பட்டது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

o o o

சென்றமாதம் திருமருகலிலிருந்து கூத்தாடித்தோப்புக்கு ஒரு ஜட்காவண்டியில் சென்று கொண்டிருந்த கோவிந்தசாமி உடையாரும் மற்ற மூவரும், வழியில் தாயுடன் நடந்து சென்ற மாரிபாய், என்னும் 20 வயதுள்ள பிச்சைக்காரப் பெண்ணைப் பலவந்தமாகத் தூக்கிவண்டியில் வைத்துக் கொண்டார்கள். இதைக்கண்ட தாய் கூச்சலிட்டாள். அந்தப் பிச்சைக்காரப் பெண் தன் கற்பை யிழக்க இடங் கொடாததால் அவளைக் கீழே தள்ளிவிட்டுப் போனார்கள். இதைக் குறித்து அப்பெண்ணின் தாயார் பிராது செய்ய, மூவரைக்கைது செய்தனர். ஒருவன் அகப்படவில்லையாம். மாஜிஸ்டிரேட் மூவர்மீது இ. பி. கோ. 511, 366 பிரிவின்படி குற்றஞ்சாட்டி செஷன் விசாரணைக்கு அவர்களை அனுப்பிவிட்டார்.

o o o

உலகத்திலே நிலக்கரி விளைவு முழுதும் தீர்ந்து போய்விட்டால் அப்புறம் இயந்திரங்களை ஓட்ட என்ன செய்வது என்னும் கவலை பலமாகத் தோன்றி யிருக்கிறது. பூமியின் உட்புறத்திலுள்ள அபார உஷ்ணத்தை மனிதன் பயன்படுத்திக் கொள்ளலாமென்று சிலர் யோசனை சொல்கிறார்கள். உலகில் தற்போதுள்ள நிலக்கரி முழுவதினாலும் கிடைக்கக்கூடிய உஷ்ணத்தை விட பூமிக்குள் 300 லட்சம் மடங்கு அதிக உஷ்ணம் இருக்கிறதாம். தீமலைகள் அதிகமாக உள்ள இதாலியிலும், காலிபோர்னியாவிலும் பூமியிலிருந்து வெளியாகும் உஷ்ணத்தை இப்போதே இவ்வாறு பயன்படுத்தி வருகிறார்களாம்.

o o o

பர்லின் நீதிஸ்தலம் ஒன்றில் இராஜ்சிக் என்கிற ஜர்மானிய மங்கை ஒருத்திமீது வீடு புகுந்து திருடியதாகக் கிரிமினல் வழக்கு ஒன்று நடை பெற்றது. அப்போது அவள் நீதிஸ்தலத்தின் ஒரு புறத்தில் உட்கார்ந்திருந்த தன் கள்ளப் புருஷனை அப்புறப் படுத்தினலொழியத் தான் கைதியின் கூண்டில் ஏற முடியாதென்று பிடிவாதம் செய்தாள். நீதிமன்ற சேவகர்கள் அவளைக் கூண்டில் ஏறவற்புறுத்திய போது எல்லோரும் தலை குனியும் வண்ணம் தன் ஆடைகளைக் களைந்து நிர்வாணமாக நின்றுவிட்டாள். உடனே நீதிபதி எல்லோரையும் வெளியில் போகச் செய்தார். பின்னர் அவளைக் கெஞ்சிக் கூத்தாடி ஆடை அணியச் செய்தபின்னர், வெளியிருந்தவர்களில் எட்டுப் பேரையே நீதிபதி உள்ளேவர அநுமதித்தார். துரதிர்ஷ்டவசமாக உள்ளே வந்த எட்டுபேர்களில் ஒருவனாயிருந்த அப்பெண்ணின் கள்ளபுருஷன் பெரிய கலாம் விளைத்துக் கூச்சலிட்டான். உடனே சேவகர்கள் அவனை வெளியே தள்ளிக் கொண்டு சென்றனர் பின்னர் நீதிபதி இந்தப் பெண்ணுக்கு ஓர் ஆண்டு சிறைத்தண்டனை விதித்தார்.

o o o

சென்னைக் கவர்னரின் தஞ்சை ஜில்லா விஜயம் சம்பந்தமாக, தஞ்சை ஜில்லா கலெக்டரான திரு. கிரே வரவேற்புக்கூட்டத்தின் அங்கத்தவர்களுக்கும் மற்றும் அரசாங்கத்துடன் ஒத்துழைப்பவர்களுக்கும் ஒரு விநோத உத்தரவிட்டாராம். கவர்னர் மண்டபத்திற்குள் வந்தவுடனே எல்லோரும் எழுந்துநிற்க வேண்டுமென்றும், வரவேற்புப் பத்திரம் வாசிக்கும்போது, கவர்னர்தம்பதிகள் தங்கள் ஆசனங்களில் அமர்ந்த பின்னரும் அங்ஙனமேநின்று கொண்டிருக்க வேண்டுமென்றும், ஒவ்வோர் அங்கத்தினராக அறிமுகப் படுத்திய பின்னரே தத்தம் இடங்களில் உட்கார்ந்து கொள்ளலாமென்றும் அந்த உத்திரவில் குறிப்பிட்டிருந்ததாம். இவ்வுத்தரவு ஒழுங்காக நடைபெறுமோ இல்லையோ என்ற ஐயம் நிகழ்ந்து, நகரசபை, ஜில்லா போர்டு, தாலூக்காபோர்டு முதலிய அங்கத்தவர்கள்கவர்னர் முன்னே எங்ஙனம் நடந்து கொள்ள வேண்டுமென்பதை முதலில் ஒத்திகை பயிற்சி பெறல் நன்று என்று மற்றொரு யோசனை கலெக்டர் வெளியிட்டார். சிலர் இதற்கு உடன்பட்டனர்; சிலர் விரோதமா யிருந்தனர். எனவே, கலெக்டர் அந்த யோசனையைத் தள்ளிவிட்டு முதல் உத்தரவையே வலியுறுத்தினார். பின்னர் கவர்னர் விஜயத்தின் போது தஞ்சை ஜில்லா போர்டிலிருந்து மாயவரம் நகரசபை வரை இந்த திறல் நாடகம் நடைபெற்றதாம்.

o o o

சபர்மதி ஆசிரமம்:—சத்தியாக்கிரக ஆசிரம நடைமுறையில் ஏற்படப்போகும் மாறுதல்களைப்பற்றிப்பத்திரிகைகளில்வெளியான விவரம் ஓரளவு கற்பனையே யாகுமென்று இப்பொழுது தெரியவருகிறது. மகாத்மா காந்தி இது குறித்து நவஜீவனில் எழுதியுள்ளார். மாறுதல்கள் சில ஏற்படப்போவது உண்மையே. அவற்றில் முக்கியமானது உணவு சம்பந்தமான நிர்பந்தங்களை எடுத்து விடுவதேயாகும். பொதுச்சமையலறையில் தாளிதத்துடனும் தாளிதமில்லாமலும் இருவகைச்சமையல் செய்யப்படும். அவரவர்களுக்கு விருப்பமான உணவளிக்கப்படும். பிரமச்சரிய விரதம் கட்டாயமாக இருந்தே வரும். சத்தியாக்கிரக ஆசிரம லட்சியங்கள் எல்லாம் முன்போலவே யிருந்து வரும். ஆசிரமத்தின் மற்ற வேலைகள் எல்லாம் "கைத்தொழில் இல்லம்" என்னும் பெயரின் கீழ் நடத்தப்பட்டுவரும்.

o o o

சென்னைப் புலால் மறுத்தல் சங்கம்:— இச்சங்கத்தின் விரிவுரையாளர் திருவாளர் கா. சி. சிவசங்கர முதலியார் நவம்பர் 4உ ஆள்வார்பேட்டை இராப்பள்ளிக் கூடத்தில் "நோயணுகாவழி" என்பது பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்துங்கால், யூரிக் ஆசிட் என்னும் நஞ்சு கலந்துள்ள புலால் உணவை முற்றிலும் நீக்கல், கள் சாராயம் பீடி சிகரட் சுருட்டு முதலியவைகள் கையாளாமை, காபி டிகஷன் சோடா குடியாமை, உப்பு புளி மிளகாய் அதிகமாய்ச் சேர்க்காமை, தூய காற்றுள்ள இடத்திலிருந்து தூய காற்றை உடம்பில் நிரப்புதல், காய் கனி கிழங்கு தானியம் நன்றாய்ப் பசித்தபிறகு அளவாயருந்துதல், தூய தண்ணீர் குடித்தல், நகரத்திற்கு வெளியே சென்று நடத்தல், நாட்டுப் புறங்களில் வாழ்தல், கவலைக்கிடங் கொடாதிருத்தல், அன்பால் உளங் தழைக்க வாழ்தல், இன்பவடிவாய் விளங்குதல் ஆகிய இவையே நோயணுகா முறை என்று விரிவாக எடுத்துக் கூறியதாக ஓர் அன்பர் எழுதுகிறார்.



## தீபாவலி அல்லது நரக சதுர்த்தசி

### நாகரிக மனிதர்கள் போலக் கொண்டாடுங்கள்

தீபாவலி என்னும் சொல் தீப ஆவலி என்னும் இரண்டு பதங்களாலாயது. ஆவலி என்னும் சம்ஸ் கிருதபதத்திற்கு 'கூட்டம்' என்றுஅர்த்தம். எனவே தீபாவலி என்றால் 'தீபங்களின் கூட்டம்' என்று பொருள்படும். தீபங்களை அடுக்கடுக்காகவும் அழகாகவும் நாம் எப்பொழுது நமதுசிரகங்களிலும் ஆலயங்களிலும் வைக்கிறோமென்றால், நமக்கு ஜயமேற்பட்டு மிகச்சந்தோஷமுண்டாகும் பொழுதே. அப்பொழுது விருந்து முதலியன செய்து பரஸ்பர வைபவம் கொண்டாடுகிறோம். புதிய ஆடைகளணிந்து அலங்கரித்துக் கொள்ளுகிறோம்.

இத்தகைய குதூகலம் இக்காலில் நமக்கு ஏற்பட வேண்டிய காரணமென்ன என்று கவனிப்போம். தங்குவதற்கும் இடமில்லாமல் மிகத்தத்தளித்த ஓர் ஏழைக்கு ஈசன் அருளால் தேவையான நிலம் சர்வ சுதந்தரத்தோடும் கிடைத்து விட்டால் அவனுடைய பரிபக்குவத்திற்குத் தக்கபடி தன் சந்தோஷத்தை வெளியில் காட்டுவானல்லவா? பிறகு அந்நிலத்தை அனுபவிக்க வேண்டிய வழிகளைத் தேடுவானல்லவா? நிலம் கற்பாறையாயிருந்தால் அதை வெடிமருந்து முதலியன மூலமாய்த் தகர்த்துப் பண்படுத்தி விவசாயத்திற்கு யோக்கிய மாக்கிக் கொள்வான். பிறகு எருவிட்டு, நீர்பாய்ச்சி, தானியங்களை விதைத்து, அவையாகுமட்டும் காவல்காத்து, பிறகு அப்பலனை அனுபவித்து ஆனந்திப்பான். இம்மாதிரி ஆனந்தத்தைப் பிற்காலம் அனுபவிப்பது உறுதி எனத்தெரிந்ததனால் அதற்கு ஆதாரமாயுள்ள நிலம் கிடைத்த பொழுதே இன்பப் பெருக்குண்டாகிறது. இம்மாதிரி 'ஜீவனுகிய' நமக்கு என்ன ஏற்படுகிறது என்று பார்ப்போம். ஜீவன் சச்சிதானந்தப் பேரொளியின் ஒரு 'பொறி' யானபடியால் அவன் தானும் அப்பேரொளியாக ஆகும் பொருட்டுத் தூலக்கும் காரண தேசங்களிலே காமம் குரோதம் லோபம் என்னும் விறகுகளைக் கொளுத்தி ஞானம் அழகு சக்தி முதலியவைகளை விளக்குகிறான். காமம் என்பது கற்பாறையினும் கடிதாதலால் அதை முதலில் விறகாக எப்படி ஆக்குவது? இக்காமமென்னும் பாறையைத் தகர்த்துப் பண்படுத்தி விதைக்க யோக்கியமாக்கிக் கொள்வதைத் தான் இந்த தீபாவலிப் பண்டிகை குறிக்கிறது. பிறகு நீர் பாய்ச்சி விதை விதைத்துப் பயிரிட்டுப் பாதுகாப் பதைத்தான் கார்த்திகை என்னும் பண்டிகை குறிக்கிறது. இந்த சாகுபடி பழுத்த பிறகு அப்பலனை எடுத்து அனுபவிக்கும் ஆனந்தத்தைத்தான் 'ஆருத்திரா தரிசனம்' காட்டுகிறது.

கற்பாறையா யிருந்த காமத்தை ஒரு விருக்ஷமாகச் செய்து அதன் மூலமாய்க் கிடைத்த பழங்களையும் புசித்து ஆனந்தித்து அதை விறகாகவும் பிறகு ஆக்கிக் கொள்ளுகிறோம். ஆகவே இந்த ஆனந்த அனுபவத்திற்கு ஆதாரமான தூலசரீரத்தை நாகலோக வாயிலாகப் பெற்றவுடன் ஜீவனுனது அச்சரீரம் மனமும் புத்தியும் விகசிப்பதற்குத் தக்கப்படி சந்தோஷத்தை வெளிக்காட்டுகிறது. காட்டு மிராண்டிகள் தப்பட்டையை அடித்துக் கொம்பூதிக் குதூகல மடைவார்கள். ஆகாரத்தில் புலாலேயும் கள்ளையும் அருந்தி ஆனந்திப்பார்கள். நாகரிகம்பெற்ற மனமும் புத்தியும் அழகும் வாய்ந்த 'மனிதன்' என்னும் பெயருக்குத் தன்னைலாயக்காக்கிக் கொண்டவனோ, மிருதங்கம், பிடில், வீணை முதலியனவைகளிலும் நல்ல உருசியும் மணமுமுள்ள பதார்த்தங்களிலும் அழகான ஆடை ஆபரணங்களிலும் சந்தோஷிப்பான். மனிதன் என்றால் மனம்வாய்ந்தவனுதலாலும் மனது ஆனந்த ரூபமானதாலும் அவ்வானந்தம் அன்பைப் பெருக்குவதினால் தான் அமையுமாதலாலும் 'மனது' என்பதைப் பெற்றேன் என்றுவது நான் நினைக்கிறேன் என்றுவது சொல்லும் எவனும் ஜீவப்பிராணிகளுக்கு துக்கத்தையும் நாகரிக முள்ளவர் கண்ணுக்குக் கோரமான ஆபாசக் காக்ஷியையும் உண்டாக்க மாட்டான்.

'நரக சதுர்த்தசி' என்றால் 'நரகம்' என்னும் ஆபாசத்திலிருந்து நாம் விடுபடும் நாள் என்றும் அடுத்தாற்போல் 'சுக்லபக்ஷம்' நாம் நம்மை மேன்மைப் படுத்திக் கொள்ள உபகரிக்கும் ஆறுகக் கிடக்கிறது என்றும் கண்டு குதூகலிக்கும் காலமாகையால் அவ்வானந்தத்தை இந்த வருஷம் முதல் நாகரிக மனிதர்கள் போலக் கொண்டாடினோமானல் ஈசுவர சம்மதமாகும். அவர்கள்தான் உண்மையான இந்துக்களாவார்கள். கடவுளுடைய அனுக்கிரகத்திற்குப் பாத்திராவார்கள்.

கிருஷ்ண பரமாத்மாவின் பேரைச் சொல்லிக் கொண்டு அவருடைய கருணைப் பிரவாகத்தைத் தடுக்கும் படியான மூடசம்பிரதாயங்களை அறவே ஒழித்து விடுவோமென்று ஒவ்வொருவரும் தீர்மானிப்போமாக. 'பழக்கங்கொடியது பார் பாறையினைக் கோழிகிழிக்கும்' என்னும் வசனப்படி இவ்வளவுகாலமாகச் செய்துவந்த அநியாயங்களையும் கொடுமைகளையும் திடீரென்று எப்படி விடுகிறது என்றுகேட்பவர்களுக்கு ஒரு பிரேரணை செய்கிறேன். அவர்கள் கீழ்க்கண்டபடி தீர்மானித்துக்கொள்ளார்களாக.

"அன்புருவான கடவுளே! அடியேன் அஞ்ஞானத்தால் சம்பிரதாயத்தைப் பற்றிக் கொண்டு உன் திருவுளத்தைப் புண்படுத்தும் வழக்கம் என்னும் கத்தியை உன் உயிர்களின்மேல் வீசி வந்தேன். அவ்வழக்கத்தை அறவே ஒழிக்க என்னால் ஆனவரை முயல்கிறேன். உன் அருளால் நான் புலாலுண்ணும் வழக்கத்தைத் தவிர்க்கும் திறம் பெறும் வரை உன்னுடைய சந்தோஷ தினமான இக்கொண்டாட்ட நாளில் புலாலுண்ண மாட்டேன்; மது வருந்த மாட்டேன்; புகை குடிக்கமாட்டேன். உனது அருள் உலகெங்கும் ஓங்குக! என்னுடைய இம்மன உறுதியை அனுக்கிரகித்து என்னை ஆட்கொள்ளும்படி வேண்டுகிறேன்."

கே. எஸ். இராமசாமி ஐயர்.

## இன்றே கதர் வாங்குக

### நாளைக்கென்று நிறுத்தவேண்டாம்

விலை அதிகம் என்று பயந்து கதர்க் கடைக்குப் போய் விசாரியாம லிருக்க வேண்டாம். அணி பருமன் என்றுயில்லை என்று நினைக்கவேண்டாம். போய் விசாரித்துப் பார்த்தால் விலை அவ்வளவு அதிகமில்லையென்று தெரியும். உடுத்திப் பார்த்தால் அவ்வளவு பருமனுமில்லை, நன்றாய்த் தாளிருக்கிறது என்றும் பார்க்கலாம். கதர்த் துணி வாங்கினால் நன்மை செய்வீர்; ஏழைகளுக்கு அன்னம் இடுவீர்; கிராமங்களில் நல் வாழ்வும் சுகமும் சந்தோஷமும் உண்டாக்குவீர். இக்காரணம் போதாதா? வேறு அணி ஏன் உடுத்த வேண்டும்? அடிமைத்தனம் நீக்கும் அணி இதுவே; ஏழைகளுக்கு உதவும் அணி இதுவே. விலை நயம், பார்வைக்கு அழகு இவைகளைக் கண்டு மோசம் போகாதீர்கள்.

எது மாறினும் கதர் இயக்கம் மாறவில்லை. நாட்டின் புனருத்தாரணத்திற்கு இராட்டையை முன்போல் ஓடச் செய்யவேண்டும் என்பது உண்மை. அதை யாரும் மறுக்க மாட்டார்.

அநேக பிரதேசங்களில் மழையில்லை. பயிர் உலர்ந்து போய்ப் பஞ்சத்தில் ஏழைகள் வருந்துகிறார்கள். கதர் உற்பத்தியிடங்களில் ஏராளமாய்க் குடியான ஸ்திரீகள் நூல் நூற்று வயிறு வளர்க்கிறார்கள். அவர்களைக் காப்பாற்ற நீங்கள் கதர் வாங்கவேண்டும். கதருக்காக இவ்வருஷம் பஞ்சு வாங்கின காலத்தில் பஞ்சு விலை ஏறியிருக்கிறது. ஆன போதிலும் கதர் விற்பனையில் நீங்கள் உதவி உற்பத்தியான துணி சீக்கிரம் விற்று பட்டால் கஷ்டம் உண்டாகாது. கதர் தவிர வேறு துணி வாங்குவதில்லை யென்று நீர் மானித்துக்கொண்டு சீக்கிரம் உதவுங்கள். நல்ல துணி, அழகாக இருக்கிறது, விலையும் குறை என்று எண்ணி வாங்கும் துணி வெளி நாட்டு மில்களில் உண்டாகும் நூலால் நெய்யப்பட்ட துணி. இவைகள் நம்முடைய கைத்தறிகளை நாசம் செய்யத் தீர்மானித்திருக்கின்றன. இன்று நூல் நூற்று அனுப்பிவரும் மில்கள் உங்களுடைய பணத்தைக் கொண்டு நாளை நமக்கு வேண்டிய துணிகளையும் நெய்து அனுப்பப் போகின்றன. பிறகு அவைகளின் போட்டிக்கு எதிராய் நம்முடைய கைத்தறிகள் நிற்கமுடியாது. இராக்ஷதர்களுக்குச் சோறுபோட்டுவளர்த்து வீட்டில் வைத்துக்கொண்ட மாதிரிதான் ஆகும்.

கதர் வாங்கிக் கிராமங்களில் தவிக்கும் ஏழைகளுக்கு அன்னமிடுங்கள். நாட்டில் புத்துயிர் உண்டாக்குங்கள்.

சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரி.

Printed and Published by T. V. Kalyanasundaran (Editor) at the Sadhu Press, 12-Ganapathi Mudaly St., Royapettah, Madras.

